உ

பாரத இதிகாசத்தில்

வரும் பாத்திரங்களின்

# குணவியல்பு

தமிழ்மொழி -- II

இரண்டாம் பகுதி

க. பொ. த. ப. (சா / த) பரீட்சைக்குத் தோற்றும் மாணவர்களுக்கென விசேடமாகத் தயாரிக்கப்பட்டதும், உதிஷ்டிரன், வீமன், அருச்சுனன், வீஷ்மர், விதுரன், திரௌபதி, குந்திதேவி, திருதராஷ்டிரன், துரியோதனன், கர்ணன், விகர்ணன், துரோணர், அபிமன்னியு, சகுனி, கிருஷ்ணன் என்னும் பதினான்கு பாத்திரங்களின் குணவியல்பு பற்றிய விபரங்களை உள்ளடக்கியதுமான புத்தம் புதிய நூல்.

வெளியீடு:

தமிழ் வளர்ச்சிக் கழகம், காரைநகர்.



(விலை ரூபா: 7 - 50

# பாரத இதிகாசத்தில் வரும் பாத்திரங்களின்

# குணவியல்பு



## 1. உதிஷ்டிரன்:

### 1. உதிஷ்டிரன் உபராஜனுதல் முதல் பகாசுரன் வதம் வரையுள்ள பகுதி:

1. உலகத்தோர், உதிஷ்டிரனைத் 'தர்மப் பிரபு' என்று பாராட்டியமை; திருதராஷ்டிரன், ஒரு சமயம் ''உதிஷ்டிரனும் அவன் சகோதரரும் அவர்களின் தந்தையினுஞ் சிறந்த உத்தமகுண வீரராக விளங்குகின்ருர்கள்'' என்று கூறியமை; உதிஷ்டிரன் அஸ்தினுபுரத்தை விட்டுப் பிரிந்து சென்றவேளையில், அந்நகர மக்கள் ''உம்மைப் போல் இனி எங்களை யாவர் காப்பவர்?'' என்று கூறிப் புலம்பியமை; அவன் வாரணுவதம் புகுந்தபோது அந்நகர மக்கள் எதிர்கொண்டு உபசரித்தமை. இவற்ருல் உதிஷ்டிரனுக்கிருந்த பெருமதிப்பு விளங்கும்.

2. தன்னையும் உடன் பிறந்தாரையும் எரித்தொழிப்பதற்கு எடுத்துக் கொள்ளப்பட்ட முயற்சிதான் அரக்கு மாளிகை என்பதனை, அதன் அமைப்பையும், விதுரன் சொன்ன பழமொழிகளையுங் கொண்டு நுனித்தறிந்தமை. இதனுல் அவனுடைய மதிநுட்பம் புலப்படும்.

3. அரக்கு மாளிகை அமைப்பின் இரகசியத்தைத் தாய்க்கும் சகோதரர்க்கும் உணர்த்தியமை. இதனுல் அவனிடத்திருந்த தாயன்பும் சகோதர பாசமும் விளங்கும்.

4. மகாசனங்கள் மட்டுமன்றித் திருதராஷ்டிரன் முதலானேரும் அரக்கு மாளிகை முழுவதும் எரிந்து சாம்பரானதும், உதிஷ்டிரனும் ஏனையோரும் மாண்டிருப்பர் என எண்ணி மனங்கலங்கித் துக்க சாகரத்தில் மூழ்கியமை, அவனுடைய சீரிய வாழ்க்கையை எடுத்துக்காட்டும்.

5. வீமன், தன்மேற் காதல் கொண்ட இடும்பியைத் தனக்கு மனைவியாக்க விரும்பி அனுமதி கேட்டபோது இசைந்தமை. இதனுல் அவனது பெருந்தன்மை விளங்கும்.

## 2. பாண்டவர்கள் பாஞ்சாலத்திலிருந்து விதுரனுடன் புறப்பட்டு அஸ்தினாபுரத்தை அடைந்தது முதல் இராஜசூய யாகம் முடியும் வரையிலான பகுதி:

1. உதிஷ்டிரன் அஸ்தினாபுரத்தை அடைந்தபோது அந்நகர மக்கள் மகிழ்ச்சியுற்று உபசரித்தது.

2. திருதராஷ்டிரனும் ஏனைய முதியோரும் அவனை வாழ்த்தித் தழுவிக் கொண்டது.

3. அரண்மனையை அடைந்ததும் திருதராஷ்டிரனையும் பெரியோரையும் வீழ்ந்து வணங்கியது.

4. இந்திரப்பிரஸ்தத்திலிருந்து அரசாண்டபோது, வியாசர், தௌமியர் முதலானோரின் அறிவுரைகளைக் கேட்டு நடந்தது.

5. ஒருசமயம் இந்திரப்பிரஸ்தத்திலே நாரதர், ''பாண்டுவைப் போல அவர் புத்திரராகிய நீவிரும், உலகத்தவர்களுக்கும் துறவியர்களுக்கும் புகலிடமாய் விளங்குதல் வேண்டும்'' என்று உபதேசித்தமையை உதிஷ்டிரன் சிரமேற் கொண்டது.

6. பாண்டவர், திரௌபதி இருக்கும் அந்தப்புரத்தை ஆண்டுக்கு ஒருவர் அன்றி மற்றவர் எட்டியும் பார்ப்பதில்லை என்ற விரதத்தை மேற்கொண்டு ஒழுகி வந்தனர். அங்ஙனமாக, ஒருசமயம் அருச்சுனன் அபுத்தி பூர்வமாக அதை மீறவேண்டிய நிலை ஏற்பட்டது. ஏற்படவே, அதற்குப் பிராயச்சித்தமாகத் தீர்த்த யாத்திரை போக விடை தருமாறு அருச்சுனன் உதிஷ்டிரனைக் கேட்டபோது, 'அது ஆவசியகமன்று' என உதிஷ்டிரன் கூறியது.

7. இராஜசூய யாகத்தைப்பற்றித் தம்பியரோடு ஆலோசித்ததுமன்றிக் கிருஷ்ணனுடைய சம்மதத்தையும் பெற்றுக்கொண்டது.

8. இராஜசூய யாகத்தின்போது அக்கிர தாம்பூலத்தைக் கிருஷ்ணனுக்கே கொடுப்பித்தது.

இப்பகுதிகளில் உதிஷ்டிரனுக்கிருந்த மதிப்பும், மரபு பேணி நடக்கும் பண்பு, அறவோர் கருத்துக்களைத் தலைமேற் கொள்ளும் தன்மை, விஷயங்களை நுணுகி ஆராய்ந்து முடிவு செய்யும் மதிநுட்பம், பெருந்தன்மை, உயர்ந்தோர்க்கு மதிப்பளிக்கும் பண்பு என்பன அவனிடத்தில் நிலைபெற்றிருந்தமையும் புலப்படும்.



## 3. விதுரன் பாண்டவர்களிடம் தூது சென்றது முதல் அவர்கள் சூதாடி நாடுநகர் இழந்து வனவாசத்துக்குப் புறப்பட்டுச் சென்றதைக் கண்ட நகர மக்கள் புலம்பியழுதமை வரையுள்ள பகுதி;

1. திருதராஷ்டிரனது ஏவலின்படி அஸ்தினாபுரத்தில் அமைக்கப்பட்ட புதிய மாளிகையைக் காண வருமாறு உதிஷ்டிரன் முதலானோரை அழைத்து வரச் சென்ற விதுரன், அங்கு வந்தால் விளையக்கூடிய கேட்டைப்பற்றி எடுத்துக் கூறவும் 'நடப்பது நடந்தே தீரும்' என்ற முடிவுடன் புறப்பட்டுச் சென்றமை, உதிஷ்டிரனுக்கு ஊழின்பால் உள்ள நம்பிக்கையை எடுத்துக்காட்டும்.

2. சூதாட வருமாறு சகுனி கேட்டபோது முதலில் மறுத்தமை, அவனது வாழ்க்கையின் உயர்ந்த இலட்சியத்தைப் புலப்படுத்தும்.

3. சகுனி, உதிஷ்டிரனிடம் ''சூதாட்டம் உனக்கு விருப்பமில்லை என்பதை நான் நம்பமாட்டேன். என்னை நீ வெல்வது கூடாதென அஞ்சுகின்றனை போலும்'' என்று கூறியதைக் கேட்ட பிறகு சூதாட இசைந்தமை, சுய கௌரவத்தைக் காப்பதில் அவனுக்கிருந்த பெருவிருப்பத்தைப் புலப்படுத்தும்.

4. ஒட்டம் வைப்பது யாரென்று உதிஷ்டிரன் சகுனியைக் கேட்டமை, சகுனியைப்பற்றி அவன் கொண்டிருந்த மதிப்பீட்டை விளக்கும்.

5. ஓர் அரசன் இன்னோர் அரசனோடு சூதாடுவதே மரபாக இருக்கவும், அரசன் அல்லாத சகுனியுடன் சூதாட உடன்பட்டமை; காட்டிற்குப் புறப்பட்டபோது, தீது புரிந்த திருதராஷ்டிரனிடமும் விடை பெறச் சென்றமை. இவற்றால் அவனுடைய பெருந்தன்மை விளங்கும்.

6. துச்சாதனனால் அரச சபைக்கு இழுத்துவரப்பட்ட திரௌபதி அலறியழுதபோது, பொங்கியெழுந்த தம்பியரைத் தருமமுறையைக் கடந்தால் தமது பெருமை குன்றிவிடுமெனக் கூறி அடக்கியமை; திரௌபதியின் துகிலை உரிந்ததனால் சோர்ந்து விழுந்த துச்சாதனன், மீண்டும் அவளின் துகிலைத் தீண்ட முற்பட்ட சமயத்தில் தமையனின் கட்டுப்பாட்டையும் மறந்து கதாயுதத்தில் கைவைத்த வீமனை விழிக் குறிப்பால் அடக்கியமை. இவற்றால் அவன் பொறுமையின் கொள்கலனாக விளங்கினான் என்பது புலப்படும்.

7. திரௌபதியின் ஏவலின்படி அடிமைத்திறம் நீங்கிக் கானகஞ் செல்லக்கருதிச் சூதாடியமை, பிறரது நல்லாலோசனைகளுக்கு அவனளித்த மதிப்பையும், அவனது சுதந்திர வேட்கையையும் புலப்படுத்தும்.

8. வனஞ் செல்லப் புறப்பட்ட சமயத்தில் விதுரன் விடை கொடுத்து வாழ்த்தியமை, உதிஷ்டிரனுக்கிருந்த மதிப்பை எடுத்துக்காட்டும்.

9. நாடுநகர் இழந்து காடு நோக்கிச் சென்றபோது, காண்போர்க்குத் தன் சினத்தால் தீமை உண்டாகாதிருக்கக் கண்களை வஸ்திரத்தால் மறைத்துக்கொண்டு நடந்தமை, அவனிடத்துக் குடிகொண்டுள்ள இரக்க சுபாவத்தைப் புலப்படுத்தும்.

## 4. காடுநோக்கி நடந்த பாண்டவர்களைச் சனங்கள் தொடர்ந்தது முதல் ஜயத்திரதன் கொல்லப்படாது விடுவிக்கப்பட்டமை வரையுள்ள பகுதி:

1. சனங்கள், உதிஷ்டிரன் காடு நோக்கி நடந்ததைக் கண்டு, "கொடுங்கோல் மன்னன் வாழும் நாட்டிற் கடும் புலி வாழும் காடு நன்றே" என்று கூறி அவனைத் தொடர்ந்தமை; அவன் இருந்த ஆச்சிரமத்துக்கு அண்மையில் முனிவர்கள் சென்று வசித்தமை. இவற்றால் அவனுக்கிருந்த மதிப்பு விளங்கும்.

2. உதிஷ்டிரன், தானும் உடன் பிறந்தோரும் திரௌபதியும் காடெய்திய சமயத்திலும் அரும்பாடுபட்டுச் சூரியனிடம் அக்ஷய பாத்திரம் பெற்றுத் தன்னுடன் கூட வந்த முனிவர்களுக்கும் பிறருக்கும் அன்னம் வழங்கியமை. இதனால் அவனுடைய விருந்தோம்பும் பண்பு புலப்படும்.

3. சூரியனிடமிருந்து அக்ஷய பாத்திரத்தைப் பெற்றுக்கொள்ளக் கூடிய நிலையிலிருந்தமை, அவனுக்கிருந்த தெய்வ அநுகூலத்தை எடுத்துக்காட்டும்.

4. சித்திரரதனாற் சிறை செய்யப்பட்ட துரியோதனனைச் சிறை மீட்பதற்கு உதவியமை; சிறை மீட்கப்பட்ட துரியோதனனைச் சகோதர உரிமையோடு உபசரித்து நற்புத்தி புகட்டியமை; திரௌபதியை மானபங்கஞ் செய்யக் கருதிய ஜயத்திரதனை வீமன் முதலியோர் கொல்ல முற்பட்டபோது அவ்வாறு செய்யவிடாது தடுத்து நிறுத்தியமை முதலியன இன்னா செய்தார்க்கும் இனியவே செய்தலை உயர்ந்த இலட்சியமாகக் கொண்டவன் என்பதைப் புலப்படுத்தும்.

5. ஜயத்திரதனைக் கொல்வதற்கு உடன்படாதிருந்த உதிஷ்டிரன்மீது திரௌபதி பழி சுமத்தியபோது, அவன், "என்ன தீமைதான் அடைகினும் பொறுத்தருளுவதே சிறந்த தருமம். பொறையே ஞானம், பொறையே சத்தியம்" என்று ஆணித்தரமாக எடுத்துரைத்தமை.



இதனால், அவன், தருமம், ஞானம், சத்தியம் என்பன நிலைபெறுவதற்கு மூலகாரணமாகவுள்ள பொறுமையைப் பெரிதாகப் போற்றிக் கடைப்பிடித்துவந்த பெரியோன் என்பது புலப்படும்.

6. திரௌபதியின் வினாவொன்றுக்குக் கூறிய பதிலில், "இரப்பவர்க்கு நான் ஈவது புண்ணியம் புகழ்கருதியன்று. ஈதல் என்கடன். யாகங்கள் செய்கின்றேன். பயன் குறித்தன்று. அது எனக்குரிய தொழில்" என்று குறிப்பிட்டமை. இது அவனது பற்றற்ற வாழ்க்கையைப் புலப்படுத்தும்.

## 5. வேதவியாசர் பாண்டவர்களது ஆச்சிரமத்தை அடைந்து உதிஷ்டிரனுக்குத் திவ்வியாஸ்திர சாஸ்திரத்தை உததேசித்தது முதல் அபிமன்னியு, விராடன் புத்திரியைத் திருமணஞ் செய்தது வரையுள்ள பகுகு:

1. வேதவியாசர், உதிஷ்டிரனுக்குத் திவ்வியாஸ்திர சாஸ்திரத்தை உபதேசித்து, அதனை அருச்சுனனுக்குக் கற்பிக்கும்படி ஆஞ்ஞாபித்தமை; யக்ஷன் உதிஷ்டிரனைத் 'தரும சொரூபி' என்று கூறியதுமன்றி, "அஞ்ஞாதவாச காலம் இடையூறின்றி முடிக" என்றும் ஆசீர்வதித்தமை; வனவாச காலத்தின்போது மகாரிஷிகள் உதிஷ்டிரனுக்கு வைதிக, லௌகிக உபதேசங்கள் செய்தமை. இவற்றால் அவனுக்கிருந்த மதிப்பை நாம் அறியலாம்.

2. நச்சுப் பொய்கைக் கரையில் நின்று யக்ஷன் வினாவிய வினாக்களுக்கெல்லாம் தடையின்றித் தக்க விடையளித்தமை, அவன், லௌகிகக் கல்வியில் மட்டுமன்றித் தத்துவ விசாரணையிலும் வல்லவன் என்பதைப் புலப்படுத்தும்.

3. நச்சுப் பொய்கை நீரருந்தி உயிர் துறந்த தம்பியர் நால்வருள், வீமனையோ அருச்சுனனையோ எழுப்பித்தரும்படி யக்ஷனைக் கேளாது சிற்றன்னை வயிற்றிற் பிறந்த நகுலனை எழுப்பியுதவும்படி கேட்டமை. இது, 'எவரும் தருமத்தின் வழிநின்றே கருமத்தை நோக்கவேண்டும்' என்னும் உயர்ந்த இலட்சியத்தைக் கடைப்பிடித்து வாழ்ந்தவன் என்பதைப் புலப்படுத்தும்.

4. தனக்கும் தன்னைச் சார்ந்தோர்க்கும் அன்னம் வழங்கி ஆதரவு நல்கிய விராடனைச் சுசர்மன் சிறை செய்தவேளை, அஞ்ஞாதவாச காலம் என்றும் பாராது விராடனை மீட்டுவரும்படி வீமனை ஏவியமை. இதனால், உதிஷ்டிரன் செய்ந்நன்றி மறவாத உத்தமன் என்பது விளங்கும்.

5. தான், பேடியாலேயே உத்தரனுக்கு வெற்றி கிடைத்ததெனக் கூறியதைக் கேட்டதும் சினமுற்றுத் தனது நெற்றியிலிருந்து உதிரம் பெருகுமாறு வில்லினல் அடித்த விராடனுக்கு எவ்வித துன்பமுஞ் செய்யாதிருந்தமை. இதனல் உதிஷ்டிரன் தீமை செய்தாரையும் மன்னிக்கும் பெருங்குணம் படைத்தவன் என்பது புலப்படும்.

6. உதிஷ்டிரன், தனது நெற்றியிலிருந்து உதிரம் பெருகுவதைப் பேடி கண்டால் பெரும் போரே விளையுமெனக் கருதி, அவனைத் தடுத்துவிட்டு உத்தரனை மாத்திரம் உள்ளே விடுமாறு வாயிலாளருக்குக் கூறியமை, அவன் எச்சமயத்திலும் சமாதானத்தையே விரும்பி வாழ்ந்த பேரருளாளன் என்பதைப் புலப்படுத்தும்.

## 6. திருதராஷ்டிரன், சஞ்சயனைத் தூதாக அனுப்புவதற்குத் தீர்மானித்தது முதல் கிருஷ்ணன் திருதராஷ்டிரனிடம் தூது செல்வதற்குப் புறப்பட்டது வரையுள்ள பகுதி:

1. தன்னிடம் தூதாக வந்த சஞ்சயன், 'துரியோதனனுடன் போர் செய்யவேண்டாம்' என்றும், 'அவன் பக்கத்து வீரர்களை வெல்வது எளிதன்று' என்றும் கூறியதைக் கேட்டுச் சினந்தமை. இதனல் உதிஷ்டிரன் சுயகௌரவத்தை இழப்பதற்கு ஒருபோதும் விரும்பாதவன் என்பது விளங்கும்.

2. தூதாக வந்த சஞ்சயனுக்கு, ''பாபகருமங்கள் அதிகரித்து நல்லறத்தைத் தலையெடுக்கவிடாதோங்கி நிலைபெறுமாயின், உயிர்க் கொலைக் கஞ்சிப் பாபகருமத்தை அடக்காது வாளா பார்த்திருத்தல் பொறுமையின் பாலதாகாது'' என்று உதிஷ்டிரன் கூறியமை, அவன் அறத்தை உயிரினும் மேலாகக் கருதிய சான்றோன் என்பதைப் புலப்படுத்தும்.

3. உரிமையைப் பெறுவதற்குச் சமாதான வழி பயன்படாவிடின் போரின் வழியாகப் பெறுவதே தக்கது என்ற எண்ணம் அவன் மனத்திற் குடிகொண்டிருந்தமை, தவிர்க்கமுடியாதபோது போர் செய்யவே வேண்டும் என்ற கொள்கையை உடையவன் என்பதைப் புலப்படுத்தும்.

4. சஞ்சயன் கூறிய தூதுக்குப் பதிலளிக்கும்படி கிருஷ்ணனை வேண்டிக் கொண்டமை, உதிஷ்டிரன் தீட்சணிய நோக்குள்ளவன் என்பதை விளக்கும்.

5. போர் நிகழின் துரியோதனனாதியோரைக் கொல்ல நேரிடுமென்று தூது சென்ற கிருஷ்ணனுக்குச் சொல்லி வருந்தியமை, எதிரிகளாயிருந்தாலும் உறவினரிற் பற்றுள்ளவன் என்பதைப் புலப்படுத்தும்.



6. துரியோதனனிடம் ஐந்து ஊரையாயினும் வேண்டுமாறு கிருஷ்ணனிடம் கூறியமை, உதிஷ்டிரன் சமாதான சகவாழ்வுக்காகக் குறைந்த பட்சக் கோரிக்கையைத்தானும் ஏற்க முன்வந்த விசால மனத்தினன் என்பதை எடுத்துக்காட்டும்.

## 7. யுத்த ஆரம்பம் முதல் துரோணர் உயிர் நீத்தது வரையுள்ள பகுதி:

1. உதிஷ்டிரன் யுத்தந் தொடங்கியபோது எதிரியின் அணியுட் புகுந்து வீஷ்மர், துரோணர், கிருபர் என்போரைப் பணிந்து யுத்தஞ் செய்வதற்கு உத்தரவும் ஆசியும் பெற்றமை, அவன், ஒரு கருமத்தைத் தொடங்கும்போது பெரியோர்களைப் பணிந்து உத்தரவும் ஆசியும் பெறும் உயரிய வழக்கத்தினன் என்பதைப் புலப்படுத்தும்.

2. தான் முன்னர்க் கூறியபடி, அபிமன்னியுவுக்குப் படைத்துணை அனுப்பாமையினலேயே அவன் இறக்க நேரிட்டது என்பதை எண்ணியெண்ணித் துக்கித்தமை, தற்செயலாகவேனும் தவறு நேர்ந்தவிடத்து அதற்காகப் பெரிதும் வருந்துபவன் என்பதைப் புலப்படுத்தும்.

3. ஜயத்திரதனை அடுத்தநாள் அந்திபடுமுன் கொன்றொழிப்பதாக அருச்சுனன் செய்த சபதத்தைத் தூதர்மூலம் பகைவர்க்கு அறிவித்தமை, எதிரி பக்கத்தாருக்கு எதனையும் அறிவித்தே செய்யும் அறநெறியைக் கைக்கொண்டொழுகிய பண்பாளன் என்பதை விளக்கும்.

4. துரோணர், அசுவத்தாமா இறந்த செய்தியை நிச்சயப்படுத்துவதற்கு உதிஷ்டிரனிடம் ஒரு தூதனை அனுப்பி வினவியமை, உதிஷ்டிரன், எதிரிகளாற்கூடச் சிறந்த வாய்மையாளன் என்று பாராட்டப்பட்டவன் என்பதை விளக்கும்.

5. 'அசுவத்தாமா இறந்தான்' என்று பொய்யுரைக்குமாறு பாண்டவர் சகாயனகிய கிருஷ்ணன் கேட்டபோது, முதலில் மறுத்தமை, உதிஷ்டிரன் நேர்மையைக் கடைப்பிடிப்பவன் என்பதை உணர்த்தும்.

6. கிருஷ்ணனின் வற்புறுத்தல் காரணமாக, ''அசுவத்தாமா இறந்தது மெய்யே, யானை'' என்று கூறியமை, தவிர்க்க முடியாத சந்தர்ப்பங்களில் அன்புடைப் பெரியோர் கூற்றை நம்பிச் செயற்படும் சபலபுத்தியினன் என்பதையும் காட்டும்.

## 8. சல்லியன் கர்ணனுக்குத் தேர்ச் சாரதியானது முதல் உதிஷ்டிரன் முடிசூடுவதற்கு இசைந்தமை வரையுள்ள பகுதி:

1. உதிஷ்டிரன், கர்ணனிடத்தில் தோல்வி அடைந்திருந்த சமயத்தில் ''கர்ணன் இன்னும் இறந்திலன்'' என்று கூறிய அருச்சுனனை, ''உன் வில்லாண்மை நன்று! நன்று!பேடி கையிற் காண்டீவம் யாது செய்யும்!'' என்று கூறிப் பரிகசித்தமை, தோல்வியைத் தழுவியபோது ஒரு சில சமயங்களில் உணர்ச்சி வசப்பட்டு நெறிதவறிக் கூறுபவன் என்பதை உணர்த்தும்.

2. போரில் முதுகிட்டோடி ஒரு தடாகத்துள் ஒளித்த துரியோதனனை நோக்கி, ''அரசராய்ப் பிறந்தோர் போருக்கஞ்சி ஒளித்திடாரன்றோ?'' என்று கூறியமை, அரசர்கள் வீரத்துக்கு முக்கியத்துவம் அளிக்கவேண்டுமென்ற கொள்கையை உடையவன் என்பதை உணர்த்தும்.

3. துரியோதனன், தான் காடு புகுந்து வாழப்போவதாகவும், நாட்டை ஆளும்படியும் கூறியபோது, அவனைப் பரிகசித்ததுமன்றி, அவன் கூற்றுக்கு உடன்படாதிருந்தமை, உதிஷ்டிரன் எப்போதும் சுய கௌரவத்தைப் பேணுபவன் என்பதைக் காட்டும்.

4. வீமனோடு போர் செய்வதற்கு ஆயுதமின்றி இருந்த துரியோதனனுக்கு ஆயுதங்கொடுத்தமை,உதிஷ்டிரனது பெருந்தன்மையை விளக்கும்.

5. யுத்த களத்தில் வீழ்ந்து கிடந்த துரியோதனனை மானபங்கஞ் செய்த வீமனைக் கடிந்தமை, ஓர் அரசன் தன்னிலையில் தாழ்ந்த போதும் அவனுக்குரிய கௌரவம் அளிக்கப்படல் வேண்டுமென்ற கொள்கையை உடையவன் என்பதை எடுத்துக்காட்டும்.

6. யுத்தம் முடிந்த பின்னர், துறவையே பெரிதும் விரும்புவதாகக் கூறி அரசாட்சியை ஏற்க மறுத்தமை, உதிஷ்டிரனுக்கு உறவினரிடமுள்ள பந்தபாச உணர்வின் மிகுதிப்பாட்டை உணர்த்தும்.



## 2. வீமன்:

### 1. பாண்டவர்கள் அரக்கு மாளிகையிலிருந்து புறப்பட்டது முதல் திரௌபதியின் துகிலுரிதல் வரையுள்ள பகுதி:

1. வீமன், அரக்கு மாளிகையிலிருந்து வெளியேறிக் காட்டிற் படுத்து நித்திரையான தாயினதும் சகோதரர்களதும் நிலையைக் கண்டு புலம்பினான். இதனால் அவன், தன்னைச் சார்ந்தோரின் துன்பத்தைக் கண்டபோது மனமுருகும் தன்மை உடையவன் என்பது புலப்படும்.

2. தாயும் சகோதரர்களும் ஆழ்ந்து நித்திரை செய்தபோதெல்லாம் அவர்களைக் காத்து நின்றான். இச்செயல் அவனது தாயன்பையும் சகோதர பாசத்தையும் உணர்த்தும்.

3. காதல் விவகாரமாக இருந்துங்கூடத் தன் தாயிடத்திலும் சகோதரர்களிடத்திலும் அனுமதி பெற்றே இடும்பியைத் தன் மனைவியாக்கினான். இதனால் அவன், தாயிடத்தும் சகோதரரிடத்தும் பெருமதிப்பு வைத்திருந்தான் என்பதை நாம் அறியலாம்.

4. திரௌபதி மாலையிட்ட பின்னர், அரசர்கள் பாஞ்சாலனைப் போருக்கழைத்தபோது, அவனுக்காகப் போர் செய்ய முன்வந்த அருச்சுனனோடு சேர்ந்து போர் புரிந்தான். இது, அவன் பிறர்க்குதவும் பெருங்குணம் படைத்தவன் என்பதை விளக்கும்.

5. சபை நடுவில், திரௌபதியின் துகில் உரியப்பட்டபோது துரியோதனனாதியோருடன் சண்டையிட்டுப் புறங்காணக்கூடிய பெருவலி கொண்டிருந்தும் உதிஷ்டிரன் கட்டளைக்கு அடங்கி வாளா இருந்தான். இதனால் அவன், தமையனின் கட்டளைக்கு அளவற்ற மதிப்புக் கொடுப்பவன் என்பது புலப்படும்.

6. பாண்டவர்களை விடுத்து வேறு நாயகனை வரித்துக்கொள்ளும்படி துச்சாதனன் திரௌபதிக்குக் கூறிய சமயத்தில், சீறி எழுந்த வீமன், அருச்சுனனுடைய ஆலோசனையைக் கேட்டு அடங்கியமை. அவன் பிறரது நல்ல கருத்துக்களை ஏற்றுக்கொள்ளும் பரந்த நோக்கம் உள்ளவன் என்பதை எடுத்துக்காட்டும்.

## 2. பாண்டவர்கள் வனவாசத்துக்குப் புறப்பட்டது முதல் கிருஷ்ணன் தூது செல்வதற்கு முன்னர், பாண்டவர்களோடு தூது பற்றி ஆலோசித்தமை வரையுள்ள பகுதி:

1. சித்திரரதனாற் சிறை செய்யப்பட்ட துரியோதனனுக்கு உதிஷ்டிரன் உதவி செய்ய முன்வந்தபோது, அது செய்தல் தகாதெனக் கூறிய வீமன், உதிஷ்டிரனுடைய அறிவுரையைக் கேட்ட பின்னர், தனது கருத்தை மாற்றிக் கொண்டமை.

2. திரௌபதியை மானபங்கஞ் செய்ய முயன்ற ஜயத்திரதனின் சிரசைக் கொய்ய முயன்ற வீமன், உதிஷ்டிரனது உபதேசத்துக்கு அடங்கி அவனைக் கொல்லாது விட்டமை.

3. திரௌபதியைக் கெடுக்க முயன்ற கீசகனை இரவு நேரத்திற் பெண் வடிவு கொண்டு யாருமறியாதபடி கொன்று தொலைத்தமை.

4. சுசர்மன் என்பான் விராடனைச் சிறை செய்தபோது, விராடன் தம்மை ஆதரித்த நன்றிக் கடனுக்காக அஞ்ஞாதவாச காலத்திலும் பொருது அவனைச் சிறை மீட்டமை.

5. தான் செய்த சபதத்தை நிறைவேற்றவேண்டுமாதலின், துரியோதனன் போருக்கு உடன்படுவது தனக்கு மகிழ்ச்சியைத் தருமெனச் சஞ்சயனுக்குக் கூறியமை.

6. கிருஷ்ணனைத் துரியோதனனிடம் தூதாக அனுப்புவதற்கு உதிஷ்டிரன் முயன்றபோது, துரியோதனனது கொடுமைக்கு அஞ்சவில்லையென்றும், உதிஷ்டிரனது பொறுமைக்கும் கருணைக்குமே அஞ்சுவதாகவுங் கூறியமை.

இப்பகுதிகளில் வீமன், தன் தமையனது கருத்துக்களுக்குக் கொடுக்கும் மதிப்பு, எதனையும் திட்டமிட்டுச் செய்வதில் அவனுக்குள்ள ஆற்றல், அவன் மனத்தில் நிலைபெற்றிருந்த, செய்ந்நன்றி மறவாத பண்பு, சபதத்தை நிறைவேற்றுவதில் அவன் கொண்டிருந்த பேரார்வம், தமையனது அளவுகடந்த பொறுமையை வெறுப்பதில் அவன் காட்டிய துணிவு என்பன புலப்படும்.



## 3. அருச்சுனன்:

### 1. அருச்சுனன், விளையாட்டுக் களத்தில் தனது விற்றிறமையைக் காட்டியது முதல் சுபத்திரை திருமணம் வரையுள்ள பகுதி:

1. வில்வித்தையில் அருச்சுனனுக்குள்ள திறமையைக் கண்டு வில்வீரரெல்லாரும் அதிசயித்தமை; எவராலும் எய்து வீழ்த்தமுடியாதிருந்த மச்சயந்திரத்தை எய்து வீழ்த்தித் திரௌபதியை மாலையிடச் செய்தமை. இவற்றால் அருச்சுனன் சமகால வீரர்கள் யாவரிலும் முன்னணியில் நின்ற மகாவீரன் என்பது புலப்படும்.

2. வில்லாசிரியனாகிய துரோணருக்குக் குருதட்சணையாக மாமன்னன் பாஞ்சாலனைச் சிறை செய்து கொண்டுபோய் உதவியமை. இச்செயல், குருவின் வேண்டுகோளை நிறைவேற்றும் கொள்கையினன் என்பதை விளக்கும்.

3. மச்சயந்திரத்தை எய்வதற்குச் சபையில் வந்து நின்ற அருச்சுனனால் திரௌபதியின் மனம் கவரப்பட்டமை, அவன் பேரெழிலும் வசீகரத் தோற்றமும் உடையவன் என்பதை எடுத்துக்காட்டும்.

4. திரௌபதி மாலையிட்ட பின்னர், பாஞ்சாலனுடன் போரிட முன் வந்த இராஜகுமாரர்களோடு அவனுக்குப் பதிலாகப் போரிட்டமை; ஒருசமயம் ஏழை அந்தணன் ஒருவனின் பொருளைக் கவர்ந்து சென்ற திருடனை மடக்கிப் பிடித்து, அப்பொருளை மீட்டுக் கொடுத்தமை. இவற்றால் அவன் பிறர்க்குதவும் பெரியோன் என்பது புலப்படும்.

5. திரௌபதி ஐவருக்கும் மனைவியாக்கப்பட்டமை. இதனால் அவன், தாய் மற்றும் பெரியோர் கட்டளைக்குக் கட்டுப்பட்டு நடப்பவன் என்பது விளங்கும்.

6. ஒருசமயம் அந்தணன் ஒருவனுடைய பொருளைக் கள்வன் கவர்ந்தோடும்போது, அவ்வந்தணன் எழுப்பிய அவல ஒலியைக் கேட்டு வில்லொன்று எடுப்பதற்காகத் தான் சென்ற மாளிகை, உதிஷ்டிரனும் திரௌபதியும் இருந்த கிருகமென்பதைப் பின்னர் அறிந்து மனம் பதைபதைத்தமை, அவனது இதய சுத்தியை எடுத்துக்காட்டும்.

7. உதிஷ்டிரனும் திரௌபதியும் இருந்த வீட்டிற் புகுந்த செயல், அபுத்தி பூர்வமாக நடந்ததென அறிந்திருந்தும், உதிஷ்டிரன் தடுக்கவுங் கேளாது தீர்த்த யாத்திரைக்குப் புறப்பட்டுச் சென்றமை, அருச்சுனனது கொள்கைப்பற்றை விளக்கும்.

## 2. அந்தணன் ஒருவன் அருச்சுனனுக்குக் காண்டீவமென்னும் வில்லைக் கொடுத்தது முதல் இந்திரன் அருச்சுனனைத் தேவலோகத்திலிருந்து கொண்டுவந்து பூலோகத்தில் விட்டமை வரையுள்ள பகுதி:

1. அந்தணன் ஒருவன் காண்டீவம் என்ற வில்லையும், அம்புக்கூட்டையும் தேரையும் அருச்சுனனுக்குக் கொடுத்தமை, வேதவியாசர், திவ்வியாஸ்திர சாஸ்திரத்தை உதிஷ்டிரனுக்கு உபதேசித்து, அதனை அருச்சுனனுக்குக் கற்பிக்கும்படி கூறியமை. இவற்றால் அருச்சுனனது தகுதியை நாம் அறியலாம்.

2. இன்னல் உற்ற அந்தணன் ஒருவனது வேண்டுகோளின்படி, தரும விரோதமான செயல்களில் ஈடுபட்ட அரக்கர் வாழும் காண்டவம் என்னுங் காட்டை எரித்தமை, அவன் பிறர்க்குதவும் மனப்பான்மை உடையவன் என்பதை எடுத்துக் காட்டும்.

3. சூதாட்டம் முடிந்து, நாடுநகர் இழந்து மரவுரியுடன் கானகஞ் செல்லப் புறப்பட்ட சமயத்தில், துச்சாதனன் திரௌபதியை நோக்கி, பாண்டவர்களை விடுத்து வேறு நாயகனை வரித்துக்கொள்ளுமாறு பழித்துரைத்தபோது சீறி எழுந்த வீமனுக்கு, அருச்சுனன், ''வார்த்தையாலொன்றுகாட்டுவது யாவர்க்கு மெளிது, செயலாற் காட்டுவதே அரிது. ஆதலின் இவர்களுக்கெல்லாம் செயலாற் காட்டுவாம்'' என்று எடுத்துரைத்தமை, அவன் சொல்லினும் செய்கையே மேலானதென்ற கொள்கையை உடையவன் என்பது புலப்படும்.

4. துரியோதனன், பாண்டவர்களுக்குச் செய்த கொடும் பழிக்காக அவனைச் சிறை செய்ததாகச் சித்திரரதன் கூறியதையும், வீமன் சிறையினின்றும் விடுவிக்கவேண்டாமென எதிர்ப்புத் தெரிவித்ததையும் பொருட்படுத்தாது தமையனது கட்டளைப்படி, சித்திரரதனிடமிருந்து துரியோதனனை மீட்டு வந்த அருஞ்செயல், அருச்சுனன், ''தமையனருள் வாக்கிய பரிபாலனஞ் செய்தவன்'' என்பதை எடுத்துக்காட்டும்.

5. சிவனை நோக்கி உணவு நித்திரையின்றி மூன்று மாதகாலம் தவஞ் செய்தமை, ஐம்பொறிகளை அடக்கி ஆளுவதில் அவன் பெற்றிருந்த வன்மையைப் புலப்படுத்தும்.

6. சிவபெருமானின் வடிவத்தைக் கண்டமை; அவன் அந்தரத்திலிருந்து கீழே விழுந்தபோது சிவபெருமான் தமது திருக்கரங்களாற்றாங்கி அணைத்து ஆசி கூறியமை; இந்திரன் அவனைத் தேவலோகங் கொண்டு சென்று இரத்தின கிரீடஞ் சூட்டியமை. இவைகளெல்லாம் அருச்சுனன் ஆன்மீக வாழ்க்கையில் அடைந்திருந்த மேம்பாட்டைப் புலப்படுத்தும்.



7. தவம் புரிந்து சிவபெருமானிடம் பாசுபதாஸ்திரம் பெற்றுக் கொண்டமை, அவனது தவச் சிறப்பை விளக்கும்.

8. ஊர்வசியின் விருப்பத்திற்கு இணங்க மறுத்ததனால் அவளின் சாபம் பெற்றுப் பேடிவடிவாகும் நிலை ஏற்பட்டபோதும் வரம்பு மீறாதிருந்தமை அவனது மன வலிமையைப் புலப்படுத்தும்.

## 3. வீமன் விராடனை மீட்டு, சுசர்மனைச் சிறைப்படுத்தியது முதல் துரியோதனன், கிருஷ்ணனது சேனையை ஏற்று நடத்திக்கொண்டு துவாரகையை விட்டு நீங்கியது வரையுள்ள பகுதி:

1. பசு நிரைகளை மீட்கச் சென்ற உத்தரன், துரியோதனனது சேனையின் பெருக்கத்தைக் கண்டு அஞ்சித் திரும்ப முற்பட்டபோது, பேடி வடிவில் சாரதியாக இருந்து தேர் செலுத்திய அருச்சுனன் வெளிப்பட்டு, உத்தரனைச் சாரதியாகக்கொண்டு போர் செய்து துரியோதனனைப் புறங்காட்டி ஓடச்செய்தான். ஒருசமயம் வீஷ்மர், ''அருச்சுனனுக்கு முன்னே வில்லெடுத்துப் பாணந் தொடுப்பவன் யார்?'' என்றும், விதுரன் வில்லை முறித்தவுடன் அங்கிருந்தோர், ''அருச்சுனன் வில்லெடுக்க வரும்போது இனி அவனுக்கு எதிர்நிற்கத்தக்க வில்வி யார்?'' என்றுங் கூறினர். இவற்றால் அவனது போர்க்கள வீரம் புலப்படும்.

2 உத்தரனுடன் போர்க்களத்துக்குச் சென்ற அருச்சுனனைக் கண்ட வீஷ்ம, துரோணர்கள், காலக் கணிதஞ் செய்து அஞ்ஞாதவாசகாலம் முடிந்ததை அறிந்து ஆனந்தித்தமை; விராடன் தனது புத்திரியை அருச்சுனனுக்குக் கொடுக்க விரும்பியமை. இவற்றால் அவனுக்கிருந்த பெருமதிப்பு விளங்கும்.

3. அருச்சுனன், தன் குருவாகிய துரோணர் பாணந் தொடுப்பதற்கு முன்னர், தான் பாணந் தொடாதிருந்தமை, எந்நிலையிலும் தனது குருவுக்கு மதிப்புக் கொடுப்பதில் அவன் காட்டிய உறுதிப்பாட்டை விளக்கும்.

4. போரில் வெற்றி பெற்றவுடன் அருச்சுனன் பேடி வடிவங் கொண்டு முன்போலச் சாரதியாகித் தன்னை வெளியிடாதிருக்கும்படி உத்தரனுக்குக் கூறியமை, பிறரது கௌரவத்தைக் காப்பாற்றுவதில் அவனுக்கிருந்த கரிசனையை எடுத்துக்காட்டும்.

5. விராடன் தனது புத்திரியை விவாகஞ் செய்யுமாறு கேட்டபோது அருச்சுனன் மறுத்தமை, அவனது நேர்மையைப் புலப்படுத்தும்.

6. விராடன் புத்திரியைத் தன் மகன் அபிமன்னியுவுக்கு மனைவியாக் குவதாகக் கூறியமை, அவனது பெருந்தன்மையை விளக்கும்.

7. கிருஷ்ணன், தான் பாண்டவர்களுக்காகப் போர்செய்யாது படைத்துணை செய்வதால் உண்டாகும் நன்மை யாதென அருச்சுன னைக் கேட்டபோது, அருச்சுனன், ''நீ சாரதியாக இருந்து தேர்செலுத்து வையேல் இவ்வுலகில் யான் அஞ்சத்தக்க படை வீரருஞ் சேனை சமுத் திரமு முண்டோ?'' என்று கூறியமை, அவனுக்குத் தெய்வ சக்தியி லுள்ள நம்பிக்கையைப் புலப்படுத்தும்.

## 4. வீஷ்மர் சேனாதிபதியானது முதல் அவர் உயிர் நீத்தது வரையுள்ள பகுதி:

1. கிருஷ்ணன் ஏவலின்படியே அருச்சுனன் எதனையும் செய்யும் இயல் பினன். இத்தொடர்பில், அவன் யுத்தம் ஆரம்பித்தபோது துர்க் கையை வழிபட்டு வரம் வாங்கியமையைக் குறிப்பிடலாம்.

2. யுத்தகளத்தில், ஆரம்பத்தில் உறவினர், குரவர், நண்பர் ஆகி யோரைக் கண்டு, அவர்களைக் கொல்ல வேண்டிவருமே என மனக் கலக்கமடைந்து போர் செய்வதற்குத் தயங்கினான். இச்சம்பவம், தன்னோடு தொடர்புடையார் மாட்டு அருச்சுனன் வைத்திருந்த ஆழமான பற்றைப் புலப்படுத்தும்.

3. வீஷ்மரின் சேனைக்கு முன்னே நிற்கமாட்டாது பாண்டவர் சேனை புறங்காட்டி ஓடியபோது, படை எடுப்பதல்லை என்று சொன்ன கிருஷ்ணன் படை எடுத்த வேளை அவனைத் தடுத்து நிறுத்தினான். இச்செயல் எவ்வித துன்பம் வரினும் சொன்ன சொல்லை யாவரும் காப்பாற்ற வேண்டுமென்ற பேரெண்ணம் அருச்சுனன் மனத்தில் நிலைபெற்றிருந் தமையை விளக்கும்.

4. யுத்தகளத்தில் வீஷ்மர் தமது அன்புப் பார்வையை அருச்சுனன் மீது செலுத்தியமை, வீஷ்மர் அவனிடத்திற் கொண்டிருந்த மதிப்பை விளக்கும்.

5. அருச்சுனன், தன்னை அன்பும் இனிமையுங் குழைந்த சொற்க ளால் ஆதரித்து அணைத்து வளர்த்த வீஷ்மரைப் போர் நடைபெற்ற போது கொல்ல முன்வராது காண்டீவத்தைக் கீழே நழுவ விட் டான். இது அவன், தனது பாட்டனாரிடம் வைத்திருந்த பேரன்பையும் பெருமதிப்பையும் புலப்படுத்தும்.



6. 'சிகண்டியோடு போர் புரிவதில்லை' என்ற வீஷ்மரின் கருத்தை அறிந்திருந்த அருச்சுனன், பாண்டவர் சேனை மாய்வதைக் கண்டு சிகண்டியை முன்னணியில் விட்டுப் போர்புரியச் செய்தமை, அருச்சுனனது யுத்த தந்திரத்தை விளக்கும்.

7. வீஷ்மர் யுத்தகளத்தில் தேரினின்றும் வீழ்ந்ததும் அவருக்கு அம் புகளால் தலையணை அமைத்துக் கொடுத்ததுமன்றி அஸ்திரப் பிரயோ கஞ் செய்து நீரும் பெற்றுக் கொடுத்தமை, அருச்சுனனது சமயோசித புத்தியையும் பேராற்றலையும் புலப்படுத்தும்.

## 5. துரோணர் சேனாதிபதியானது முதல் கைலாசப தியிடம் ஜயத்திரதனைக் கொல்லுதற்கேற்ற அஸ் திரமொன்று பெற்றுக் கொண்டமை வரை யுள்ள பகுதி:

1. ஒரு சந்தர்ப்பத்தில், கிருஷ்ணன் அருச்சுனனுடைய தேரைப் பக தத்தன் ஏறியிருக்கும் யானைக்குப் பின்புறத்தில் விடுத்தபோது அதனை விரும்பாது தேரை யானையின் முன்னே விடுவித்தமை.

2. அருச்சுனன், தன்மேல் பகதத்தன் விடுத்த அஸ்திரத்தைக் கிருஷ் ணன் தனது மார்பில் ஏற்றபோது அவனைக் கடிந்தமை.

3. அபிமன்னியு இறந்தமையை அறிந்ததும் அடியற்ற மரம் போல வீழ்ந்து மூர்ச்சித்தமை.

4. அபிமன்னியு இறந்த மறுநாள் அந்திபடுமுன் ஜயத்திரதனைக் கொல்வதாகச் செய்த சபதத்தினை எவ்வாறு முடிக்கப் போகின்றாய் எனத் தன்னைக் கேட்ட கிருஷ்ணனை நோக்கி, ''நின் துணையுளதாங் காறும் கூறிய சபதம் முடியாது விடேன்'' என்று சொன்னமை.

இப்பகுதிகளில், யுத்த தருமத்தைக் கடைப்பிடிப்பதில் அருச்சு னனுக்கிருந்த உறுதிப்பாடு, தனது வீரத்துக்கு ஊறு விளைக்கக்கூடிய எதனையும் பிறர் செய்யும் போது அவனுக்கு உண்டாகும் கோபாவே சம், அவனின் புத்திரபாசம், கிருஷ்ணனால் வெற்றியுண்டாகும் என் பதில் அவனுக்கிருந்த நம்பிக்கை என்பன புலப்படும்.

## 6. ஜயத்திரதனைத் தேடிச் சேனையுட் புகுந்தது முதல் கர்ணன் தன் புண்ணியத்தை முனிவருக்குக் கொடுத்தது வரையுள்ள பகுதி:

1. அருச்சுனன், ஜயத்திரதன் தலையை நிலத்திடை வீழ்த்துபவன் தலையுமுடனே பிளந்திறுக என்று அவன் தந்தையிட்ட சாபம், தன்பாற் பலியாதிருப்பதற்கு, ஜயத்திரதன் தலையை அவனது தந்தையின் மடியில் விழச்செய்து, அவனைக் கொண்டு நிலத்தில் வீழ்த்துவித்து இருவரையும் மரணமடையச் செய்தான். இது அவனது சாதுரியத்தைப் புலப்படுத்தும்.

2. தனது பெருமதிப்புக்குரிய கிருஷ்ணன் கேட்டும் அசுவத்தாமா இறந்துவிட்டானெனத் துரோணருக்குச் சொல்ல முன்வராதிருந்தமை, அவன் நேர்மைக்கு மாறான வழிகளைக் கையாண்டு வெற்றி பெறுவதை ஒரு சிறிதும் விரும்பாத சுத்தவீரன் என்பதைப் புலப்படுத்தும்.

3. துரியோதனனுக்காகப் போர் செய்த துரோணர், திருஷ்டத்துயுமனுற் பிடிக்கப்பட்டபோது அவரைக் கொல்ல வேண்டாமென்றும் உயிரோடு சிறை செய்து வருமாறும் கூறியமை, குருவைத் தெய்வமாக மதிக்கும் அவனின் பண்பை எடுத்துக்காட்டும்.

4. தான், குருவைக் கொடுங்கொலை புரிதற்குடன்பட்ட மகா பாவியாக நேர்ந்துவிட்டதே என்று இரங்கியமை; ''மானமும் போய் நரகத்திற்கு மாளாயினேன்'' என்று கிருஷ்ணனுக்குக் கூறியமை. இவற்ருல் அருச்சுனன் பழிக்கஞ்சும் பெருங்குணம் படைத்தவன் என்பது விளங்கும்.

5. கிருஷ்ணன் கட்டளையை மீறிப் போருக்கு ஆயத்தமாய் நின்ற வீமனை இழுத்து, அக்கினியைக் கான்று கொண்டு சென்ற நாராயணஸ்திரத்திஞல் தாக்கப்படாமற் காத்தமை, அருச்சுனனின் சமயோசித புத்தியைப் புலப்படுத்தும்.

6. ஒரு சந்தர்ப்பத்தில், ''கர்ணன் இன்னும், இறந்திலன்'' என்று அருச்சுனன் கூறியதைக் கேட்ட உதிஷ்டிரன், வில்லாண்மையில் வல்லான் ஒருவன் கையில் காண்டீவத்தைக் கொடுக்கும்படி சொன்னபோது, அருச்சுனன் தன்னையும் மறந்து தமையனைக் கொல்ல எழுந்தமை, தனது வீரத்துக்கு ஊறு விளைக்கக்கூடிய எதையும், அவன் ஏற்றுக்கொள்ள மாட்டான் என்பதைப் புலப்படுத்தும்.



7. வில்லாண்மைக்கும் பெருந்தகைமைக்கும் உறைவிடமானவன் என்று எதிரியாகிய கர்ணனுற்கூடப் பாராட்டப்பட்டமை, அருச்சுனனிடத்திற் குடிகொண்டிருந்த வீரத்தையும் பெருந்தன்மையையும் மிகத் துலாம்பரமாக எடுத்துக்காட்டும்.

# 4. வீஷ்மர்:

## 1. திரௌபதியின் திருமணத்தை அடுத்துத் திருதராஷ்டிரன், மந்திர சபையில் பாண்டவர்களது அரசுரிமை தொடர்பாக ஆலோசித்தது முதல் பாண்டவர்கள் வனவாசத்துக்குப் புறப்பட்டுச் சென்றமை வரையிலான பகுதி:

1. வீஷ்மர், துரியோதனன் செய்துவருகின்ற துர்க்கிருத்தியங்களைக் கண்டு கொடிய யுத்தமொன்று மூளப்போகின்றதே என்றும், சந்திர வமிசத்துக்கு அபகீர்த்தி வந்ததே என்றும் கவலைப்பட்டார். இதனுல் உலக அமைதியையும் தமது மரபுப் பெருமையையும் கட்டிக்காப்பதில் அவருக்கிருந்த கரிசனை புலனுகும்.

2. திருதராஷ்டிரனுக்கோ துரியோதனனுக்கோ அரசுரிமை இல்லையென்று மந்திர சபையில் ஆணித்தரமாக எடுத்துரைத்தார்; மேலும், பாண்டவர்கள் மீண்டும் சூதுக்கு அழைக்கப்பட்டபோது எதிர்த்தார். இவற்ருல், உண்மையென்று தோன்றியதை உறுதியோடு எடுத்துரைப்பதிலும், அநீதியான செயல்களுக்கு எதிர்ப்புத் தெரிவிப்பதிலும் அவர் காட்டிய துணிவை நாம் அறிந்துகொள்ளலாம்.

3. பாண்டவர் நடாத்திய இராஜசூய யாகத்துக்குச் சமுகங் கொடுத்தார்; திருதராஷ்டிரனது வேண்டுகோளின்படி பாண்டவரிடம் தூது செல்வதற்கு உத்தரவு வேண்டி நின்ற விதுரனுக்கு உத்தரவு வழங்கினர். இவற்ருல் அவரது பெருந்தன்மை விளங்கும்.

4. இராஜசூய யாகத்தில் அக்கிரதாம்பூலம் கிருஷ்ணனுக்கே உரியதெனக் கூறினர். இது, பெரியோரை மதிக்கும் பண்பு அவரிடத்திற் குடிகொண்டிருந்தமையை எடுத்துக்காட்டும்.

## 2. வீமன் விராடனை மீட்டு, சுசர்மனைச் சிறைப்படுத்தியது முதல் யுத்த ஆரம்பம் வரையுள்ள பகுதி:

1. உத்தரன் சாரதியாகிச் செலுத்திவந்த தேரிலே இருந்த வீரனது செயல்களாலும் ஆண்மையாலும், அவ்வீரன் அருச்சுனனே என வீஷ்மர் தீர்மானித்தார். இதனுல் அவரின் மதிநுட்பம் புலப்படும்.

2. வீஷ்மர், அஞ்ஞாதவாச காலம் முடியமுன் அருச்சுனன் வெளிப்பட்டு விட்டானே என அச்சமடைந்து காலக்கணிதஞ் செய்தார். இது, அருச்சுனனது வாழ்க்கை சிறப்புறல் வேண்டும் என்பதில் அவருக்கிருந்த பேரார்வத்தையும், காலக்கணிதத்தில் அவருக்குள்ள ஆற்றலையும் எடுத்துக்காட்டும்.

3. தேரிலே வந்த அருச்சுனனை முகமலர்ச்சியோடு உற்று நோக்கிக் குறிப்பினுல் வாழ்த்தினுர். இது, அவரின் பெருந்தன்மையைப் புலப்படுத்தும்.

4. (i) அருச்சுனன், உரிய காலத்திற்கு முன்னர் வெளிப்பட்டுவிட்டானெனத் துரியோதனன் ஆனந்தக்கூத்தாடியபோது, வீஷ்மர், அஞ்ஞாதவாச காலம் முடிந்துவிட்டதென்றும், ஆராயாமல் அகங்கரித்து அகங்களிப்பது அறிவின்மையாமென்றும் கூறினுர்.

(ii) பசு நிரைகளைக் கவர்ந்த துரியோதனன், அருச்சுனனேடு போர் தொடுக்க முற்பட்டபோது, போர் தொடுப்பது வேரோடு மாளுவதற்கேதுவாகுமாதலின், கவர்ந்த பசுநிரைகளை விடுத்துச் சமாதானப்படுமாறு வீஷ்மர் இடித்துரைத்தார்.

(iii) பாண்டவர்க்குரிய அரசை அவர்களுக்குக் கொடுத்துவிடுமாறு தூதாக வந்த தௌமியர் கூறியதைக் கேட்டுச் சபையிலிருந்தோர் அனைவரும் வாளாவிருந்தனராக, வீஷ்மர் எழுந்து தௌமியர் கூறியதை ஏற்றுக்கொள்ளுமாறு வற்புறுத்தினுர்.

(iv) தூதாக வரும் கிருஷ்ணனை வரவேற்கக்கூடாதென்றும், வரவேற்பவர் தண்டனைக்குள்ளாவரென்றும் துரியோதனன் ஆணையிட்டிருக்கவும் கிருஷ்ணன், மண்டப வாசலை அடைந்ததும் வீஷ்மர் எழுந்தோடித் திருவடிகளில் வீழ்ந்து வணங்கி வரவேற்றுர்.

இவற்றுல் முறையே, உள்ளதை உள்ளபடி உறுதியோடு எடுத்துரைப்பதிலும், தரும வழியைக் கடைப்பிடிக்கும்படி இடித்துரைப்பதிலும், நீதியை வற்புறுத்திக் கூறுவதிலும், எவருடைய எதிர்ப்பையும் பொருட்படுத்தாது சரியெனத் தோன்றியதைச் செய்வதிலும் அவருக்கிருந்த துணிவு புலப்படும்.



5. தம்மை இகழ்ந்த கர்ணனுக்கு, அவன் வீரத்தினின்றும் தவறிய இடங்களைச் சுட்டிக்காட்டி அவனது வாயை அடக்கினுர். இச்செயல் அவரின் சமயோசித புத்தியைப் புலப்படுத்தும்.

6. கிருஷ்ணன், தனது விஸ்வரூபத்தைக் காட்டியபோது, அது அவனது மெய்வடிவம் என்பதை உணர்ந்து துதித்தார். இது, அவரின் ஆன்மீக வளர்ச்சியை எடுத்துக்காட்டும்.

7. துரியோதனன் அவரைச் சேனுதிபதியாக்கினுன். இதனுல் அவரின் போர்க்கள வீரம் புலப்படும்.

## 3. போர்க்களத்தில் கிருஷ்ணன் ஞானேபதேசம் கேட்டு மனவாட்டம் நீங்கிய அருச்சுனன் காண்டீவத்தைக் கையிலெடுத்தது முதல் துரோணர் சேனுதிபதியாக்கப்பட்டது வரையுள்ள பகுதி:

1. வீஷ்மருக்குப் பெருமதிப்பு இருந்தது. அதனை,

(i) உதிஷ்டிரன், வீஷ்மரது பாதங்களைப் பற்றிக்கொண்டு ஒப்பற்ற வீரமும் பெருமையும் உடையீரெனப் பாராட்டிப் போர் செய்வதற்கு அனுமதியும் ஆசியும் பெற்றமை,

(ii) வீஷ்மர் வீழ்ந்த சேதிகேட்டுப் பாண்டவர் பக்கத்தாரும் கௌரவர் பக்கத்தாரும் போரை நிறுத்தி அவரைப் பார்க்க விரைந்தமை,

(iii) அவர் வீழ்ந்துபட்டவேளை தேவர்கள் புஷ்பமாரி பொழிந்தமை,

(iv) வீஷ்மர் இறந்ததும் திருதாரஷ்டிரன், ''கண் போயிற்று, மானம் போயிற்று, மைந்தர் துணை போயிற்று'' என்றெல்லாம் அலறியமை முதலியன நன்கு எடுத்துக்காட்டும்.

2. வீஷ்மரிடத்தில் ஒப்பற்ற வீரப்பண்பு இருந்தது. அதனை,

(i) உதிஷ்டிரன் மனம் தளரும் வகையில் வெற்றிமாலை சூடியமை,

(ii) புறமுதுகிட்ட தம் வீரரை மடக்கிப் போரில் ஊக்கமடையச் செய்து பாண்டவர் சேனையைக் கலக்கி அருச்சுனன் ஊக்கத்தைக் குலைத்தமை,

(iii) அருச்சுனனது சரங்கள் எள்ளிட இடமின்றிச் சரீரம் எங்கணும் கோத்த நிலையிலும் சோராத கரவேகச் சரமாரியால் பாண்டவர் சேனையை மாய்த்தமை,

(iv) வீஷ்மரை வெல்வது இயலாத காரியமென்று கிருஷ்ணனும் உதிஷ்டிரனும் அறிந்திருந்தமை,

(v) உண்மையான வீரன் போர்க்களத்தில் அம்சநூளித் தலையணை யையும் பொற்பாத்திரத்து நீரையும் விரும்புவதில்லை என்பதைச் செய லிற் காட்டியமை,

(vi) உத்தராயணம் வருங்காறும் யோகசாதனையால் உயிரை நிறுத் தித் துயின்றமை என்பன கொண்டு அறியலாம்.

3. வீஷ்மரிடத்தில் பெருந்தன்மை இருந்தது. அதனை,

(i) உதிஷ்டிரனுக்குப் போர் செய்ய அனுமதியும் ஆசியும் வழங்கி யமை,

(ii) கௌரவருக்குத் தான் கட்டுப்பாடுடையவராய் இருந்தமையை எடுத்துரைத்தமை,

(iii) போர்க்களத்தில் அருச்சுனன்மீது அன்புப் பார்வை செலுத் தியமை,

(iv) கோபத்தோடும் மார்ச்சரியத்தோடுமின்றிச் சுவர்க்க அவாவோடு போர் செய்யவேண்டுமென்று கர்ணனுக்கு உபதேசித்தமை,

(v) யோக நித்திரை செய்தபோது தம்மிடம் வந்த கர்ணனைத் தமது கையாற் பற்றித் தழுவியமை,

(vi) கர்ணனை விளித்து, ''துரியோதனன் சோற்றை உண்பவனுகிய நீ அவன் கருத்தின்வழி யொழுகுதல் கடனன்றே, அது நின் குற்ற மன்று'' என்று கூறியமை,

(vii) கர்ணனுக்குப் போர் செய்ய அனுமதி வழங்கியமை என்பன கொண்டு அறியலாம்.

4. உதிஷ்டிரனுக்குப் போர்க்கருமம் தவிர வேறேது வேண்டினும் ஈவதாகக் கூறியமை; தன்னை வெல்வதற்கான உபாயத்தைத் தானே உரைத்தமை. இவை வீஷ்மரது வண்மையை விளக்கும்.

5. கிருஷ்ணன், தன்னை நோக்கிச் சக்கரத்தைச் சுழற்றிக் கொண்டு பாய்ந்ததன் நோக்கத்தைப் புரிந்து கொண்டமை, அவரது மதிநுட் பத்தைப் புலப்படுத்தும்.



# 5. விதுரன்:

## பாண்டவர் அஸ்தினுபுரத்தை விட்டு நீங்கியது முதல் இந்திரப்பிரஸ்த நகரம் அமைக்கப்பட் டது வரையுள்ள பகுதி:

விதுரனிடத்தே, பிறர்க்குதவும் பண்பு, திட்டமிட்டுச் செயற் படும் செம்மை, தூரதிருஷ்டி, உளத்தூய்மை, மதிநுட்பம், நீதியை எடுத்துரைக்கும் துணிவு, பெருந்தன்மை என்பன நிறைந்திருந்தன. இவ்வுண்மையைப் பின்வரும் நிகழ்ச்சிகள் வலியுறுத்தும்.

1. உதிஷ்டிரன் அஸ்தினுபுரத்தை விட்டு நீங்கியபோது, அவனுக்குக் காதில் சில பழமொழிகளை ஓதியமை.

2. துரியோதனன் அரக்கு மாளிகையில் வைத்து உதிஷ்டிரன் முத லானவர்களைக் கொல்லவிருப்பதை இரகசியமாக ஒரு தூதன் மூலம் அவர்களுக்கு அறிவித்தமை.

3. பாண்டவர்கள் அரக்கு மாளிகையினின்றும் ஒருவருமறியாது தப் பிப் போவதற்கு வசதியாக ஒரு பிலத்துவாரத்தையும் அமைப்பித் தமை.

4. அரக்குமாளிகை எரிந்து சாம்பரானபோது பாண்டவர்கள் இறக்கவில்லை என்பதை அறிந்திருந்தும் அறியாதான் போன்று துக்கங் கொண்டாடியமை.

5. பாண்டவர்கள் அக்கினியில் மாளாமல் க்ஷேமமாய் இருத்தலைப் பிறருக்கு வெளியிடாதிருந்தமை.

6. பாண்டவர்கள் துருபதன் சபையில் அடைந்த வெற்றியைக் கேட் டுப் பேரானந்தம் அடைந்தமை.

7. தனது ஆலோசனைகளும் உதவியும் இன்றி அரசாட்சியை நடாத்த முடியாதென்ற எண்ணத்தைத் திருதராஷ்டிரனுக்கு உண்டாக்கியமை.

8. தனது கொள்கைகளெல்லாம் திருதராஷ்டிரனது கருத்துக்கு மாறு பட்டனவாயினும் மந்திரசபை அங்கீகரிக்கக்கூடிய மதியுரைகளைக் கூறி யமை.

9. பாண்டவர்களுக்குத் துரியோதனன் செய்த துரோகச் செயல்களை மந்திரசபையில் கண்டித்துப் பேசியமை.

10. பாஞ்சாலத்துக்குச் சென்று திருதராஷ்டிரனது சமாதானக் கருத்தைப் பாண்டவர்க்கு உரைத்தமை.

## 2. துரியோதனனால் புதிதாக அமைக்கப்பட்ட அலங்கார மாளிகையிற் பிரவேசித்திற்கு முகூர்த்தம் வைக்கப்பட்டமை முதல் பாண்டவர் வனவாசம் மேற்கொண்டு கங்கைக் கரையினை அடைந்தமை வரையுள்ள பகுதி:

1. இந்திரப்பிரஸ்தத்திற்குத் தூது சென்று பாண்டவரை அழைத்து வருமாறு திருதராஷ்டிரன் விதுரனை வேண்டிக் கொண்டபோது விதுரன், தன் ஆட்சேபனையைத் தெரிவித்துத் திருதராஷ்டிரனை எச்சரித்தான்.

2. பின்னர், தூது சென்ற விதுரன் உதிஷ்டிரனுக்குத் தூதை எடுத்துரைத்ததுடன் விளையத்தக்க கேட்டையும் அறிவுறுத்தினான்.

3. திரௌபதியை ஒட்டப் பொருளாக வைத்துச் சூதாடுமாறு கோரப்பட்ட வேளை கோபாவேசத்துடன் திருதராஷ்டிரனைக் கண்டித்தான்.

4. திரௌபதியின் துகிலுரியப்பட்டபோது விதுரன் மட்டும் வருந்திச் சபித்தான்.

5. பாண்டவர் மீண்டும் சூதுக்கு அழைக்கப்பட்டபோது எதிர்த்தான்.

6. வனவாசத்துக்குப் புறப்பட்டபோது பாண்டவருக்கு உறுதிமொழி கூறி வாழ்த்தி அனுப்பினான்.

7. குந்தியைத் தன்னோடு விட்டுச் செல்லுமாறு உரைத்தான்.

8. பாண்டவரும் திரௌபதியும் தௌமியரும் ஒவ்வொரு விதமாக அஸ்தினபுரத்தை விட்டு நீங்க அதன் தாற்பரியத்தைத் திருதராஷ்டிரனுக்குக் கூறினான்.

இப்பகுதிகளில், விதுரனின் நீதியும் சத்தியமும் தவறாத தன்மை, உண்மையென்று தோன்றியதை எச்சந்தர்ப்பத்திலும் உறுதியோடு எடுத்துரைக்கும் துணிவு, தன்னம்பிக்கை, எதிர்கால விளைவுகளையும் அறியும் ஆற்றல் முதலானவை புலப்படும்.



## 3. தௌமியர் தூது சென்றது முதல் கிருஷ்ணன் குந்தியைச் சந்தித்துக் கர்ணன் அவளது மகன் என்பதை அறிவிக்கும் வரையிலான பகுதி:

1. தௌமியர் தூதாக வந்து சென்ற பின்னர், பாண்டவரைச் சந்தி செய்து வருமாறு திருதராஷ்டிரன் கேட்டபோது விதுரன் மறுத்தமை.

2. தூதாக வரும் கிருஷ்ணனை உபசாரங்களாலும் பிறவற்றாலும் மகிழ்விக்கமுடியாதென்றும், அவற்றால் அவன் மனமாற்றம் அடையமாட்டானென்றும் திருதராஷ்டிரனுக்குக் கூறியமை.

3. திருதராஷ்டிரனிடம் தூதாக வந்த கிருஷ்ணனை எதிர்சென்று வரவேற்று உபசரித்து அழைத்து வந்தமை.

4. தனது சபைக்குப் பாண்டவர் தூதாக வரும் கிருஷ்ணனை வரவேற்கக்கூடாதென்றும், வரவேற்பவர் தண்டனைக்குள்ளாவரென்றும் துரியோதனன் ஆணையிட்டிருக்கவும் கிருஷ்ணன் வந்தவுடன் எழுந்தோடிச் சென்று திருவடிகளை வணங்கி வரவேற்றமை.

5. தான், விருந்திட்டுக் கிருஷ்ணனை உபசரித்தமை குறித்துத் துரியோதனன் வெகுண்டு தகாத வார்த்தைகளால் தன்னை ஏசியபோது, அவனைக் கொல்லத்தக்க பெருவலி படைத்திருந்தும் கொல்லாது விட்டமை.

6. அறமும் ஆண்மையும் மிக்க பாண்டவர்க்கும் அவர் தூதாக வந்த கிருஷ்ணனுக்கும் துணை போவதாகத் துரியோதனன் கூறியது வசையாகுமெனத் தான் அஞ்சவில்லையென்று கூறியமை.

7. தான், பாண்டவர்க்குத் துணையாயிருப்பதாகத் துரியோதனன் கூறியமையால் அவ்வுரை பொய்யாவண்ணம் வில்லை முரிப்பதாகக் கூறியமை.

8. வில் முறிக்கப்பட்டதும் அங்கிருந்தோர், ''அருச்சுனனுக்கு எதிர் நிற்கத்தக்க வில்லி யார்?'' என்று கூறித் துக்கப்பட்டமை.

9. தனது மாளிகைக்கு வந்த கிருஷ்ணனுக்கு, ''வரற்பால தீமைகளை நோக்காதவனும், மந்திரிகள் ஆலோசனையைக் கேளாதவனும், தனது நாவினைக் காவாதவனுமுள்ள ஓர் அரசனுக்காகப் போரிற் சென்று சாதல் பழுதுடைத்து'' எனக் கூறியமை.

இப்பகுதிகளிலிருந்து தருமநெறியைக் கடைப்பிடிக்கும் பண்பு, பெரியோர், இலட்சியத்தினின்றும் வழுவார் என்பதில் நம்பிக்கை,

பெருந்தன்மை, நீதியான செயல்களை எச்சந்தர்ப்பத்திலும் எவருக்கும் அஞ்சாது செய்யும் துணிவு, பழிக்கஞ்சும் பெருங்குணம், வீரத்தையும் அறத்தையும் போற்றும் கோட்பாடு, மதிநுட்பம், வீரம், அமைச்சுத் தொழிலில் அபரிமிதமான ஆற்றல் என்பன விதுரனிடத்தில் நிலை பெற்றிருந்தன என்பது புலப்படும்.

# 6. திரௌபதி:

## 1. திரௌபதி மாலையிட்டது முதல் அவளது வஸ்திரத்தைக் களைந்திடுமாறு துரியோதனன் துச்சாதனனுக்குக் கூறியது வரையிலான பகுதி:

1. மச்சயந்திரத்தை வீழ்த்தியவன் அந்தணன் என்பதைப் பொருட்படுத்தாது அவனுக்கே மாலையிட்டமை, திரௌபதி அதிகாரம் அந்தஸ்து முதலியவற்றை நோக்காது வீரத்துக்கே முதலிடம் அளிப்பவள் என்பதைப் புலப்படுத்தும்.

2. வியாசர் ஆஞ்ஞைப்படியும் குந்தியின் அனுமதிப்படியும் அவள் ஐவருக்கும் மனைவியானமை; வியாசரும் நாரதரும் கூறியபடி வருஷத்திற்கொருவராகப் பாண்டவர்க்கு இல்லற மனைவியானமை. இவை, பெரியோர் கருத்துக்கு அவள் பெருமதிப்புக் கொடுப்பவள் என்பதை விளக்கும்.

3. சூதாட்டம் முடிந்த பின்னர், தன்னை அழைக்க வந்தவரிடம் ''எனது நாயகர் தம்மைத் தோற்ற பின் என்னைத் தோற்றனரா? அன்றி என்னைத் தோற்றனரா?'' என்பதை அறிந்து வரும்படி கூறியமை, அவள் அறநெறிகளை நன்கு அறிந்திருந்தாள் என்பதைப் புலப்படுத்தும்.

4. தன்னைப் பற்றிப்போவதற்குத் துச்சாதனன் வந்திருப்பதை அறிந்து காந்தாரியிடம் ஒடி அடைக்கலம் புகுந்தமை, அவளின் சமயோசித புத்தியை எடுத்துக்காட்டும்.

5. சபைக்குக் கொண்டுவரப்பட்ட திரௌபதி, துரியோதனனாதியோரின் கருத்தைக் கடைக்கண்ணாற் கணித்து உணர்ந்தமை, எதனையும் நுனித்து நோக்கும் அவளின் மதிநுட்பத்தை எடுத்துக்காட்டும்.

6. திரௌபதி சபையிலிருந்த பெரியோரை நோக்கி, ''இச்சபையிலே தருமதேவதை இல்லாதகன்றதோ! நடுநிலை எங்கொளித்ததோ? இத்துணைக் கொடுஞ் செயலுக்கு யான் செய்த குற்றந்தான் யாதோ!'' என்று அலறி அழுது முறையிட்டமை, அவள் இக்கட்டான நிலையிலும்



நீதிக்காகப் போராடும் உயர்ந்த இலட்சியம் உள்ளவள் என்பதை விளக்கும்.

7. சபையில், பலர் முன்னிலையில், துரியோதனனைப் பார்த்து, ''பாவி! யாது செய்யப் புகுந்தாய்? நீயும் நின் குலமும் வாழ விரும்பினால் இக்கொடுஞ் செயலுக்குடன்படாய்'' என்று கூறியமை, அவளின் துணிவைப் புலப்படுத்தும்.

## 2. துகிலுரிதல் முதல் வனவாசத்திற்குப் புறப்பட்டது வரையுள்ள பகுதி:

1. துகிலுரியப்பட்டபோது திரௌபதி, தன்னைக் காத்தருளுமாறு கோவிந்தனை வேண்டினாள்; உள்ளத்தையும் உயிரையும் அவன் திருவடிகளில் வைத்தாள்; தன் கையிரண்டும் தனக்குத் துணையாகாவெனத் தலைமேற் குவித்தாள். இவற்றால் அவளது தெய்வ நம்பிக்கை புலப்படும்.

2 துச்சாதனன் துகிலை உரியத் தொடங்கியபோது விதுரன் ''அந்தோ! நாசப்பட்டொழிதற்கே துணிந்தீர்! துணிந்தீர்!'' என்று கூறினான். சபையிலிருந்தோர் திரௌபதியைப் பதிவிரதை என்று பாராட்டினர். சம்பவங்களையெல்லாம் திருதராஷ்டிரனும் காந்தாரியும் கேள்விப்பட்டதும் விரைந்தோடித் திரௌபதியை அணைத்து, ''எம் மைந்தர் செய்த வன்செயல்களை எம் பொருட்டுப் பொறுத்தருள்'' என்று இரந்தார்கள். இவற்றால் அவளது கற்பின் மேம்பாடு புலப்படும்.

3. திருதராஷ்டிரனும் காந்தாரியும், தம் மைந்தர் செய்த பிழைகளைப் பொறுத்தருளுமாறு திரௌபதியை இரந்தபோது, அவள் கோபந் தணிந்து அன்புருவானாள். இது, அவள் குற்றத்தை மன்னிக்கும் பெருங்குணம் படைத்தவள் என்பதை எடுத்துக்காட்டும்.

4. திரௌபதி, திருதராஷ்டிரனது கேள்விக்கிசைந்து அவனிடம் இரண்டு வரங்கள் கேட்டாள். இதனால் அவள் பெரியோரை மதித்து நடக்கும் பண்புள்ளவள் என்பதை நாம் அறியலாம்.

5. வேறெந்த வரங்களையுங் கேளாது உதிஷ்டிரன் அடிமைத்திறமும் மற்றைய நால்வர் அடிமைத்திறமும் நீங்க வேண்டுமென்ற வரங்களையே திரௌபதி கேட்டாள். அன்றியும், பாண்டவர் குடும்பத்தினர் எல்லாரும் அடிமைத்திறத்தினீங்கிக் காட்டகஞ் செல்லவேண்டுமென்ற அடிப்படையில் சூதாடுமாறு உதிஷ்டிரனை வேண்டினாள். இவை, சுதந்திர வாழ்க்கையில் அவள் கொண்டுள்ள பெருவிருப்பை எடுத்துக்காட்டும்.

6. மூன்ருவது வரத்தையும் கேட்குமாறு திருதராஷ்டிரன் திரௌபதிக்குக் கூறியபோது, அவள் ''இனி எனக்கு வேண்டுவது யாதுமில்லை. எனது நாயகர்கள் இனித் தமக்கு உறுதி தேடிக்கொள்வார்கள்'' என்று கூறினுள். இது, இந்தியப் பண்பாட்டு நோக்கில் அவள் ஓர் இலட்சியப் பெண் என்பதைப் புலப்படுத்தும்.

7. துன்பக் கடலில் வீழ்ந்து கரையேற வகையின்றித் தடுமாறி வருந்திய பாண்டவர்களுக்குத் திரௌபதி நாவாயாகி அவர்களைக் கரைசேர்த்ததாகக் கர்ணன் கூறினுன். இது அவளின் மதிநுட்பத்தை எடுத்துக்காட்டும்.

## 3. வனவாசம் முதல் கிருஷ்ணன் தூது செல்லப் புறப்பட்டது வரையுள்ள பகுதி:

1. ஜயத்திரதன், பாண்டவர்கள் இல்லாத சமயம் பர்ணசாலைக்கு வந்தபோதும் அவனுக்கு உறவினர்க்குரிய உபசாரஞ் செய்தமை, திரௌபதியின் விருந்தோம்பும் பண்பைப் புலப்படுத்தும்.

2. தீது செய்தமை காரணமாகச் சிறை செய்யப்பட்ட ஜயத்திரதனை விடுக்கும்படி உதிஷ்டிரன் சொல்லியபோது, 'தீயவரை ஒறுக்காது விடுதல் தீமையை வளர்ப்பதாகும்' என்று கூறி அவனுடன் வாதாடியமை; தீது செய்த கீசகனை வீமன் கொல்வதற்கு உதவியமை, இவை, யாராயிருந்தாலும் தீமை செய்தவர் தண்டிக்கப்படல் வேண்டும் என்ற கொள்கை அவள் மனத்திற் குடிகொண்டிருந்தமையைப் புலப்படுத்தும்.

3. உதிஷ்டிரனின் அறிவுரைகளைக் கேட்டு, ஜயத்திரதன் தண்டிக்கப்படல் வேண்டும் என்ற தன் கருத்தை மாற்றிக்கொண்டமை, திரௌபதி பெரியோரின் அறிவுரைகளுக்கு மதிப்பளிப்பவள் என்பதைக் காட்டும்.

4. கீசகனின் தீக்கடன் முடிந்த பின்னர், விராடனும் பத்தினியும் திரௌபதிக்கு அஞ்சி ஒழுகியமை, அவளது கற்பின் சிறப்பை எடுத்துக் காட்டும்.

5. பிருகந்நளை என்ற பெயருடன் பேடி வடிவிலிருந்த அருச்சுனனை, உத்தரன் தனது தேர்ச்சாரதியாக்குவதற்கு ஏதுவாக இருந்தமை, திரௌபதியின் நிருவாகத் திறமையைப் புலப்படுத்தும்.

6. ''பாதகன்பால் பாண்டவர் ஐந்து ஊரை வேண்டிப் பெற்று வாழ்வதற்கு எண்ணினராயின் யான் அன்று விரித்த கூந்தலை இனி என்று முடிப்பதோ அறியேன்'' என்று கிருஷ்ணனுக்குக் கூறிய குறிப்பில், போர் வேண்டுமென்று புலப்படுத்தியது திரௌபதியின் சாதுரியத்தை எடுத்துக்காட்டும்.



7. பாண்டவர்கள் துரியோதனன்பால் ஐந்து ஊர் வேண்டிப் பெறுவராயின் அன்றே தன் உயிரை விட்டுத் தன் விரதத்துக்கு எல்லை காண்பதாகக் கூறியமை, தான் மேற்கொண்ட விரதத்தில் அவளுக்கிருந்த உறுதிப்பாட்டைப் புலப்படுத்தும்.

## 7. குந்திதேவி:

1. போஜராஜனுக்கு ஏக புத்திரியும் பாண்டுவுக்குப் பத்தினியுமாகிய இவள், எதனையும் ஒளிப்பு மறைப்பின்றிச் சொல்லும் இயல்பினள். இதனை, தான் கன்னியாய் இருந்த காலத்தில் தந்தையிடம் ஒரு முனிவர் வந்ததும், ஐந்து மந்திரங்கள் உபதேசம் பெற்றதுமாய நிகழ்ச்சிகளைக் கூறியமைகொண்டு அறிந்துகொள்ளலாம்.

2. இவள், தான் பெற்ற இன்பம் பிறரும் பெறவேண்டும் என்ற பெருவிருப்பத்தை உடையவள். இதனை, சக்களத்தியாகிய மாத்திரைக்குக் குழந்தைச் செல்வம் கிடைத்தற் பொருட்டு அரிய மந்திரத்தை உபதேசித்தமை கொண்டு அறியலாம்.

3. குந்திதேவி, தனது நாயகன் கட்டளைக்கு அடங்கி நடக்கும் பண்புடைத்தவள். நாயகன் கட்டளைப்படி மந்திர பலத்தினுலே அறக்கடவுளையும் வாயு பகவானையும் இந்திரனையும் நினைந்து வரவழைத்துப் புத்திரர் மூவரைப் பெற்றமை, இதனை எடுத்துக்காட்டும்.

4. இவள் மனத்தில் புத்திர பாசம் மேலோங்கிநின்றது. இதனைப் பின்வரும் சம்பவங்கள் எடுத்துக்காட்டும்.

(i) தூதாகச் சென்ற கிருஷ்ணன், தன்னைச் சந்தித்துத் தனது மைந்தர் போரினுலேயே தமது நாட்டைப் பெறவேண்டிய நிலை உருவாகியுள்ளதெனச் சொன்னதும் 'போரினுல் யாது விளையுமோ' எனக் கலங்கி அழுதமை.

(ii) கர்ணன், தன்மகனெனக் கிருஷ்ணன் வாயிலாக அறிந்ததும் அதனை அவன், முன்னமே அறிவிக்காமையால் நிகழப்போகும் பேராபத்தை எண்ணியெண்ணிச் சோகித்துப் புலம்பியமை.

(iii) கர்ணனிடஞ் சென்று, தானே அவனது அன்னை என்பதை நிரூபித்து அவனை அன்பொழுகத் தழுவியமை.

(iv) பாண்டவர் பக்கம் வருமாறு கர்ணனை அழைத்தபோது, அவன், துரியோதனன் தனக்குச் செய்த பேருதவிகளை மறந்தால்

தனக்கு உய்வில்லையேன்று கூறியதைக் கேட்டு அலறியமை.

(v) அருச்சுனன்மீது சர்ப்பக்கணையை ஒரு முறைக்குமேல் ஏவாதிருக்குமாறும், மற்றைய பாண்டவர்களைக் கொல்லாதிருக்குமாறும் கர்ணனை வேண்டிக்கொண்டமை.

(vi) கர்ணன் இறந்ததும் அவனைத் தன்மடிமீது வைத்து அழுதமை.

5. குந்திதேவி தனது வாக்கைக் காப்பாற்றும் பண்புடையவள். இதனை, கர்ணனுக்கு வாக்களித்தபடி அவன் இறந்ததும் அவனை மடிமீது வைத்து அழுதமை புலப்படுத்தும்.

## 8. திருதராஷ்டிரன்:

### 1. இராஜசூய யாகம் முடிந்து அரசர்களும் மற்றேரும் தத்தம் வாசஸ்தானங்களை நோக்கி மீண்டது முதல் பாண்டவர் வனவாசம் மேற்கொண்டு கங்கைக் கரையினை அடைந்தமை வரையுள்ள பகுதி:

1. திருதராஷ்டிரன் பிள்ளைப் பாசம் மிக்கவன். இதனை,

(i) இராஜசூய யாகத்தின் பின்னர், துரியோதனன் பாண்டவர்களுக்குக் கேடு செய்வதற்குத் துணை நிற்குமாறு கேட்டுக்கொண்டபோதும், பாண்டவர்களைச் சூதாட்டத்திற்கு அழைப்பதென முடிவு செய்துகொண்டபோதும் திருதராஷ்டிரன் முதலில் தனது மறுப்பைத் தெரிவித்துப் பின்னர் உடன்பட்டமை,

(ii) தோற்றவர் பன்னிரண்டு வருஷ வனவாசமும் ஒரு வருஷம் அஞ்ஞாத வாசமும் செய்யவேண்டுமெனப் பொருந்திச் சூதாடுமாறு பாண்டவரைப் பணிக்கவேண்டுமெனத் துரியோதனன் வேண்டிக் கொண்டபோது, துரோண, விதுர, வீஷ்மாசாரியர்களின் எதிர்ப்பையும் காந்தாரியின் மறுப்பையும் பொருட்படுத்தாது துரியோதனது வேண்டுகோளுக்கு இசைந்தமை முதலியன நன்கு புலப்படுத்தும்.

2. திருதராஷ்டிரன் அறமுறை தெரியாத கசடன். இதனை, திரௌபதியை ஒட்டப் பொருளாக வைத்து ஆடும்படி சகுனிகேட்ட சமயத்தில், சபையில் இருந்த யாவரும் மனங் கவன்றிருக்க விதுரன் எழுந்து அவ்வாறு கேட்பது தருமமாகாது என்று இடித்துரைத்ததையும் திருதராஷ்டிரன் பொருட்படுத்தாதிருந்தமை கொண்டு அறியலாம்.



3. இவன், எதிர்காலத்தில், துரியோதனன் பாண்டவருடன் ஒட்டியும் ஒட்டாமலும் வாழவேண்டும் என்னும் கோட்பாட்டினன். இதனை,

(i) தன் மைந்தர் செய்த வன்செயல்களைப் பொறுத்துக் கொள்ளுமாறு திரௌபதியை இரந்தமை,

(ii) அவளுக்கு வரங் கொடுத்தமை,

(iii) தன்னிடம் வந்து விடை கேட்ட உதிஷ்டிரனை வாழ்த்தியமை,

(iv) பாண்டவர்களை அவர்களது இராசதானிக்குச் சென்று வாழுமாறும் துரியோதனன் செய்த குறும்புகளை மறந்துவிடும்படியும் தன்னையும் காந்தாரியையும் மறவாதிருக்கும்படியும் கூறி விடை கொடுத்தமை முதலியவற்ருல் அறியலாம்.

4. திருதராஷ்டிரன், நிகழ்ச்சிகளின் கருத்தை அறிந்துகொள்ளும் சுபாவத்தினன். இதனை, பாண்டவர்களும் திரௌபதியும் தௌமியரும் அஸ்தினபுரத்தைவிட்டுப் புறப்பட்டு ஒவ்வொருவரும் ஒவ்வொரு விதமாகச் சென்றதன் கருத்தை விதுரரிடம் கேட்டு அறிந்தமை கொண்டு அறியலாம்.

### 2. தௌமியர் தூது சென்றது முதல் பாண்டவர்களின் மனநிலையைச் சஞ்சயன் வாயிலாக அறிந்த திருதராஷ்டிரன், பாண்டவர்களுக்குரிய இராச்சிய பாகத்தைக் கொடுத்துவிடுமாறு துரியோதனனைக் கேட்டுக்கொண்டது வரையுள்ள பகுதி:

1. பாண்டவர்களுக்குரிய அரசை அவர்களுக்குக் கொடுத்து ஒற்றுமையாக வாழாவிட்டால் கௌரவர் குலத்துக்கே நாசமுண்டாகும் என்பதைத் தௌமியர் கூறக் கேட்டதும் திருதராஷ்டிரன், பாண்டவர்கள்மீது அன்புள்ளவன் போல் நடித்து வஞ்சகக் கண்ணீர் வடித்தான். இச்செயல், அவன் உள்ளொன்று வைத்துப் புறம்பொன்று செய்பவன் என்பதை எடுத்துக்காட்டும்.

2. தனது மந்திரத் தலைவர், பாண்டவர்களின் வீரத்தை எடுத்துரைத்தமையைக் கேட்டுப் பாண்டவர்களோடு பகைக்காதிருக்கும்படி துரியோதனனை இரந்தபோது அவன் மறுக்கவே, பாண்டவர்களுக்குத் துரோகஞ் செய்யத் துணிந்தான். இது, அவன் உறுதியற்ற நெஞ்சினன் என்பதைப் புலப்படுத்தும்.

3. பாண்டவர்களுக்குத் துரோகஞ் செய்யும் வழி யாதெனத் தேருது வாடி, தன் உள்ளக்கருத்தை வீஷ்மராதியோருக்குச் சொல்ல நாணினான்.

பிரிவு

இதனுல் அவன், பெரியார் மத்தியில் தன்னை நல்லவனுகக் காட்டிக் கொள்பவன் என்பது புலப்படும்.

4. 'பாண்டவர்களது நியாயமான கோரிக்கையைத் தட்டிக் கழிக்க முடியாது' என்ற எண்ணம் திருதராஷ்டிரன் மனத்திற் குடிகொண்டிருந்தது. இதனைப் பின்வருவன கொண்டு அறியலாம்.

(i) பாண்டவர்களுக்குரிய அரசைக் கொடுத்து அவர்களோடு ஒற்றுமையாக வாழாவிட்டால் கேடு உண்டாடுமெனத் தௌமியர், வீஷ்மர் என்போர் கூறியதைக் கேட்டு உள்ளம் நடுங்கி மதி மயங்கியமை.

(ii) மந்திரத் தலைவர் பாண்டவர்களுடைய வலிமையை எடுத்துரைத்ததைக் கேட்டதும் நெஞ்சம் துணுக்குற்றமை.

(iii) பாண்டவர்களிடஞ் சென்று அவர்களைச் சந்திசெய்து வருமாறு விதுரனைக் கேட்டமை.

(iv) பாண்டவர் கேட்பது நியாயமே என்றும், அதற்கிசையாவிடின் பெருங்கேடு வருமென்றுஞ் சஞ்சயன் கூறியதைக் கேட்டுத் துயருற்றமை.

(v) தூது செல்லுமாறு சஞ்சயனைப் பலமுறை இரந்தமை.

(vi) தூது சென்ற சஞ்சயன் வாயிலாகப் பாண்டவர்களின் மன நிலையை அறிந்து மேல்வரப்போகுங் கேட்டினைச் சிந்தித்தமை.

5. திருதராஷ்டிரன், பாண்டவர்களுக்குரிய இராச்சிய பாகத்தைக் கொடுத்துவிடுமாறு துரியோதனனுக்குக் கூறினுன். இது, பெரியோரின் அறிவுரைகளுக்கு அவன் ஓரளவு கட்டுப்படும் இயல்பினன் என்பதைப் புலப்படுத்தும்.

## 9. துரியோதனன்:

### 1. கர்ணன் அங்கதேச அரசனுதல் முதல் இடிம்பன் வதம் வரையுள்ள பகுதி:

1. துரியோதனன் சுயநல வேட்கை உள்ளவன். இதனை, கற்றவர் கன்னியர், கொடையாளிகள், வீரர் முதலியோருக்குச் 'சாதி' நோக்கப்படுவதில்லை என்று கூறிக் கர்ணனை அங்கதேசத்திற்கு அரசனுக்கியமை கொண்டு அறியலாம்.

2. துரியோதனனிடம் பொருமைக் குணம் குடிகொண்டிருந்தது. இதனை,

(i) உதிஷ்டிரன் உபராஜனுக இருந்து சிறப்புற அரசாட்சி நடாத்தியமை கண்டு மனம் புழுங்கியமை,



(ii) உதிஷ்டிரன்மீது சனங்கள் எல்லோரும் அன்புள்ளவர்களாக இருக்கின்றுர்களாதலின் அவனே அரசனுவான் என்றும், தனக்கு அரசுரிமை கிடையாதென்றும் குறிப்பிட்டுப் பாண்டவர்களை அஸ்தினுபுரத்துக்கு வெளியே போக்கிவிடுவதற்கு ஓர் உபாயம் தேடுமாறு தந்தையை வேண்டிக்கொண்டமை,

(iii) பாண்டவர்கள் அஸ்தினுபுரத்தை விட்டுப் புறப்பட்டபோது அந்நகர மக்கள் வருந்தியமையையும் வாரணுவதத்தில் அவர்களுக்கிருந்த மதிப்பையுங் கண்டு மனம் கொதித்தமை என்பன புலப்படுத்தும்.

3. துரியோதனன் வாக்குவன்மையும் சாதுரியமும் மிக்கவன். இதனை, பாண்டவர்களை அஸ்தினுபுரத்திலிருந்து அகற்றுவதற்கு உபாயந் தேடுமாறு தான் வேண்டிக்கொண்டதை மறுத்த திருதராஷ்டிரனுடன் வாதாடித் தனது வேண்டுகோளை ஏற்கச்செய்தமை எடுத்துக்காட்டும்.

4. துரியோதனன், பிடிவாத குணமும் மமதையும் உள்ளவன். பாண்டவர்களை அஸ்தினுபுரத்திலிருந்து வெளியேற்றுவதற்கு உபாயந் தேடும்படி தந்தைக்குக் கூறியபோது அவன் கூறிய நன்மொழிகளை ஒப்புக்கொள்ளாதிருந்தமை, இதனை விளக்கும்.

5. 'எவ்வழியைக் கையாண்டாயினும் பாண்டவர்களைக் 'கருவறுக்க' வேண்டும்' என்ற எண்ணம் துரியோதனன் மனத்தில் ஆழமாகப் பதிந்திருந்தது. இதனை,

(i) நன்கு சுவாலித்து எரியக்கூடிய அரக்குமாளிகை அமைப்பித்து அதிலே பாண்டவர்களை வசிக்கச் செய்தமை,

(ii) அரக்குமாளிகை எரிந்து சாம்பரானதை அறிந்து பாண்டவர்கள் மாண்டொழிந்தார்களெனப் பொதுமக்கள் புலம்பியழுதபோது கவலைப்படாதிருந்தமை என்பன புலப்படுத்தும்.

### 2. இராஜசூய யாகம் முற்றுப்பெற்றது முதல் பாண்டவர்கள் வனவாசத்திற்குப் புறப்பட்டது வரையிலான பகுதி:

1. துரியோதனன், பாண்டவர்கள் இராஜசூய யாகம் முடித்துச் சிறப்புற்றிருந்தமையைக் கண்டு மனம் துடித்தான்; தனது சபாமண்டபத்தைக் காட்டிலும் பாண்டவர்களின் சித்திரமாளிகை சிறந்துவிட்டதே என்று புழுங்கினுன். இவற்றுல் அவன் பொருமை உள்ளம் படைத்தவன் என்பது விளங்கும்.

2. தான், பாண்டவர்களுக்குச் செய்யவிருக்கும் கேட்டினுக்கு உதவியாக இருக்கும்படி தந்தையை வேண்டிக் கொண்டபோது, தந்தை

கூறிய அறிவுரைகளை ஒப்புக்கொள்ள மறுத்தான். இது, அவனது பிடிவாத குணத்தைப் புலப்படுத்தும்.

3. (i) பாண்டவர்களுடன் சூதாடி வெல்வதாகச் சகுனி கூறியபோது, துரியோதனன் அவனைத் தழுவி, ''எனது அபீஷ்டம் முடிந்தது! முடிந்தது!'' என்று கூறி ஆனந்தக் கூத்தாடினன்;

(ii) சூதாட்டம் தொடர்பான உரையாடல் நிகழ்ந்தபோது, தான் ஓட்டம் வைப்பதாகவும், தனக்காகத் தன் மாதுலன் ஆடுவானென்றும் கூறினன்;

(iii) சூதாட்டத்தில் சகுனி அடுத்தடுத்து வெற்றி பெற்றபோது ஆனந்தக் கூத்தாடிச் சகுனியைக் கட்டித்தழுவி முத்தமிட்டான்;

(iv) சூதாட்டத்தில் தோற்றபின், பாண்டவர்கள், திருதராஷ்டிரனிடம் விடை பெற்றுக்கொண்டு புறப்பட்டபோது, தோற்றவர் பன்னிரண்டு வருஷ வன வாசமும் ஒருவருமறியாவண்ணம் ஒரு வருஷ வாசமும் செய்யவேண்டுமெனப் பொருந்திச் சூதாடுமாறு பணித்தருள வேண்டுமென்று தந்தையை இரந்தான். இவற்ருல் எங்ஙனமாயினும் பாண்டவர்களை 'நிர்மூலமாக்க' வேண்டுமென்ற எண்ணம் துரியோதனன் மனத்திற் குடிகொண்டிருந்தமை புலப்படும்

4. பாண்டவர்களின் நாடுநகரங்களைக் கவர்ந்தான். இது, அவன் ஒருசிறிதும் இரக்கமில்லாதவன் என்பதை விளக்கும்.

5. திரௌபதியை அரச சபைக்குக் கொண்டுவரச் செய்து, விதுரன் தடுக்கவுங் கேளாது அவளது துகிலை உரிவித்தான். இச்சம்பவம், அவன் அறநெறி தெரியாத முழுமகன் என்பதைப் புலப்படுத்தும்.

6. திரௌபதியின் துகில் உரியப்பட்டபோது, அது வளர்ந்த அதிசயத்தைக் கண்டும் மேலும் தீய கருமத்தைச் செய்ய முன்வந்தான். இதனல் தெய்வசக்தியில் அவனுக்கு நம்பிக்கை இல்லை என்பது புலனுகும்.

## 3. கிருஷ்ணன் தூது சென்றது முதல் விதுரன் வில்லொடித்தல் வரையுள்ள பகுதி:

1. கிருஷ்ணன், தூதாக அரச சபைக்கு வரும்போது அவனை வரவேற்கக்கூடாதெனத் துரோணர் வீஷ்மர் முதலானேருக்குத் துரியோதனன் கட்டளையிட்டிருந்தான். இது, அவனது அறியாமையையும் அகங்காரத்தையும் எடுத்துக்காட்டும்.



2. கிருஷ்ணனுடைய அறிவுரையைக் கேட்டுப் பாண்டவர்க்குரிய அரசை அவர்களுக்கு மீளவுங் கொடுப்பதற்குத் திருதராஷ்டிரன் முன் வந்தபோது ஒருசிறிய இடத்தைத்தானும் கொடுக்கமுடியாதென்று துரியோதனன் அழுத்தந்திருத்தமாகக் கூறினன். இதிலிருந்து அவன் பிறரது நல்வாழ்வை விரும்பாத அழுக்காறுள்ளம் படைத்தவன் என்பதும், பிடிவாத குணத்திற்கு அடிமைப்பட்டவன் என்பதும் புலப்படும்.

3. பாண்டவர்கள் இரந்து பெறுவதை விடுத்துத் தமது வீரத்தைக் காட்டி அரசைப் பெற்றுக்கொள்ளலாமே என்று தூதாகச் சென்ற கிருஷ்ணனிடம் கூறினன். இதனல், எவரும் தன்னை வெல்லமுடியாதென்ற இறுமாப்பு அவனிடம் குடிகொண்டிருந்ததென்பதை அறியலாம்.

4. கிருஷ்ணன் ஒரு சந்தர்ப்பத்தில், ''போர் செய்யத் துணிந்தனையாயின் கைதருக'' என்று துரியோதனனைக் கேட்டபோது, துரியோதனன், கிருஷ்ணனைப் பரிகாசஞ் செய்து இகழ்ந்துரைத்தான். இது, அவன் பிறருக்கு மதிப்பளிக்காத கீழ்மகன் என்பதைப் புலப்படுத்தும்.

5. விதுரன், தனது மனையில் கிருஷ்ணனுக்கு விருந்திட்டமை குறித்து அவனை மிகக் கேவலமாக இழித்துரைத்தான. இதனல் அவன், பெரியோரின் சகவாசமோ அவர்களைப் போற்றும் பண்போ இல்லாதவன் என்பதனையும், எத்துணை உயர்ந்த நிலையிலிருப்பவர்களையும் முன்பின் யோசிக்காது இழிவாகப் பேசும் முழுமகன் என்பதனையும் அறியலாம்.

## 4. கிருஷ்ணன், குந்திதேவியுடன் உரையாடிவிட்டுப் புறப்பட்டது முதல் கர்ணனின் பிறப்பைப் பற்றி அவனுக்கு உணர்த்தியது வரையுள்ள பகுதி:

1. தூதாகச் சென்ற கிருஷ்ணனைப் பிடித்துச் சிறையிலிடவேண்டுமென்று துரியோதனன் கூறினன். இக்கூற்று, அவன் அரசியல் சம்பிரதாயந் தெரியாத அறிவீனன் என்பதையும், தேக வலிமையால் எதனையும் சாதித்துவிடலாமென்ற நப்பாசையுள்ளவன் என்பதனையும் வெளிப்படுத்தும்.

2. துரியோதனன் முதலியோர், கிருஷ்ணன் தூது வந்தது பற்றி ஆராய்ந்த சமயத்தில், கிருஷ்ணனைக் கொல்லவேண்டுமென்ற ஆலோசனையும் கூறப்பட்டது. அதனை மறுத்துரைத்த விகர்ணனை, அவன் இளைஞன் என்ற காரணத்தால் துரியோதனன் ஏசித் துரத்திவிட்டான். இச்செயல், வயதிற் குறைந்தவர்கள் நீதியை எடுத்துக் கூறினுலும் அதனைப் பொருட்படுத்தாதவன் என்பதை எடுத்துக்காட்டும்.

3. கிருஷ்ணனைக் கொல்வதற்கு நிலவறை அமைத்து அதற்குள்ளே மல்லர்களை இருத்தினான். இது, துரியோதனனுக்குத் தெய்வ சக்தியில் நம்பிக்கையில்லை என்பதையும் அதிகாரத்தால் எதனையும் சாதித்து விடலாம் என்ற எண்ணமுள்ளவன் என்பதையும் புலப்படுத்தும்.

4. கிருஷ்ணன், தன் விஸ்வரூபத்தைக் காட்டியபோது துரியோதனன் மாத்திரம் அலட்சியமாக இருந்தான்; கிருஷ்ணன், தூதை முடித்துக் கொண்டு மீண்ட சமயத்தில் வீஷ்மர், துரோணர் முதலிய பெரியோரும், ஏனைய அரசர்களும் அவனது இரதத்தின் பின்னே சென்று வழிவிட்டபோதும் வாளாவிருந்தான். இவற்றால், அவன் பெரியோருக்கு மதிப்பளிக்கும் பண்பு இல்லாதவன் என்பது புலப்படும்.

## 5. துரோணர் சேனாதிபதியாக்கப்பட்டது முதல் யுத்தம் முடியவுள்ள பகுதி:

1. துரோணர் சேனாதியாக்கப்பட்டதும் துரியோதனன், உதிஷ்டிரனைக் கொல்லாமற் சிறைசெய்து வருமாறும், அவ்வாறு செய்தால் அவனைச் சூதாட்டத்திற்கு உடன்படுத்தி மீண்டும் வனம் புகுவிக்கலாம் என்றும் சொன்னான். இதனால், பாண்டவர்களைப் போரிலே வெல்வது இயலாத காரியம் என்ற எண்ணமும், அவர்களைத் தந்திரமாகவே வெல்லவேண்டுமென்ற எண்ணமும் அவன் மனத்தில் இருந்துவந்தன என்பதை அறியலாம்.

2. அபிமன்னியு கொல்லப்பட்டதை அறிந்த அருச்சுனன், ''நாளை அந்திபடுமுன் ஜயத்திரதனைக் கொல்லாதொழியின் அக்கினிப் பிரவேசஞ் செய்வது சத்தியம்'' என்று வஞ்சினமுரைத்தான். இதனைத் தூதர் மூலம் அறிந்த துரியோதனன், ''நாளை அந்திபடு முன்னே அருச்சுனனைத் தீயிடைக் குதிப்பிப்பேன்; அவ்வளவிற் போருமொழியும்; என் அச்சமும் நீங்கிவிடும்'' என்று கூறி ஆனந்தக்கூத்தாடினான். இது அருச்சுனனை 'வேரறுப்பதில்' துரியோதனனுக்கிருந்துவந்த ஆவேசத்தை எடுத்துக்காட்டும்.

3. கர்ணனுக்குத் தேர்ச்சாரதியாக இருப்பதற்கு மறுத்த சல்லியனோடு நயமாக உரையாடி அவனைச் சம்மதிக்கச் செய்தான். இதனால், துரியோதனன் வாக்குவன்மையும் சாதுரியமும் உள்ளவன் என்பதும், தன் கருமம் முடித்தற்கு யாரையும் வணங்கித் தாழும் இயல்பினன் என்பதும் புலப்படும்.

4. பாண்டவர்களோடு போர் தொடுப்பதை நிறுத்திச் சமாதானம் புகுவதே தக்கதென அசுவத்தாமாவும் கிருபனும் துரியோதனனுக்குச்



சொன்னபோது, அவன், தான் மேலுலகாள மனங்கொண்டிருப்பதாகச் சொன்னான். இதனால், அவன் மரணத்தைப் பற்றிக் கவனியாது போர் செய்வதிலேயே அதிக நாட்டங்கொண்டிருந்தான் என்பது புலப்படும்.

5. கிருதவன்மாவும் அசுவத்தாமாவும் உயிர் துறந்தனர் என்றெண்ணித் துரியோதனன் ஓடிப்போய் ஒரு தடாகத்தினுள்ளே புகுந்தொளித்தான்; பின்னர், தான் காடு புகுந்து வாழப்போவதாகவும் உதிஷ்டிரனுக்குச் சொன்னான். இவற்றால், துரியோதனன் உறுதியற்ற நெஞ்சினன் என்பது புலப்படும்.

6. துரியோதனன், வீமனது காலால் உதைக்கப்படக்கூடிய நிலையிலிருந்தான். இது, அவன் ஒரு கீழ்மகன் என்பதை விளக்கும்.

7. அசுவத்தாமா, துரியோதனனது, பரிதாப நிலையைக் கண்டு, அவனுக்கு உதவி செய்ய முன்வந்தபோது, துரியோதனன், பாண்டவர்கள் தன்னை வென்று அரசு கைக்கொண்டாரென்னுஞ் சொல் உண்டாகா வண்ணம் காக்குமாறு வேண்டிக்கொண்டான். இது, தனது உயிர் போகும் நேரத்திற்கூடப் பாண்டவர்மீது கொண்டுள்ள பொறாமை அவனை விட்டு நீங்கவில்லை என்பதையும், உலகோர், பாண்டவரைப் பாராட்டக்கூடிய நிலை ஏற்படக்கூடாது எனபதில் அவன் கொண்டிருந்த உறுதிப்பாட்டையும் புலப்படுத்தும்.

## 10. கர்ணன்:

### 1. விதுரன், தனது வில்லை முரித்தெறிந்தது முதல் அவன் மனையிலிருந்த கிருஷ்ணனிடம் இந்திரன் சென்றது வரையுள்ள பகுதி:

1. விதுரன், தனது வில்லை முரித்தெறிந்ததும், 'அருச்சுனனுடன் எதிர்நின்று போர் செய்வதற்கு எவருமிலர்' என்று கூறி அங்கிருந்தோர் ஏங்கியவேளை, தானே தமியனாக நின்று அவனை வெல்லமுடியுமெனக் கர்ணன் கூறினான்; இன்னொரு சந்தர்ப்பத்தில், தூதாக வந்த கிருஷ்ணனைத் தன்னாற் கொல்ல முடியுமெனவுங் கூறினான். இவற்றால், அவன், தனது வீரத்தில் அபாரமான நம்பிக்கை கொண்டிருந்தான் என்பது புலப்படும்.

2. கர்ணனுடைய பிறப்பைப்பற்றி அவனுக்கு எடுத்துரைத்த கிருஷ்ணன், பாண்டவர்களுடன் சேர்ந்து அரசாளுமாறு கர்ணனைக் கேட்டபோது, அவன், துரியோதனன் தனக்குச் செய்த உதவிகளை எடுத்துரைத்து மறுத்துவிட்டான். இது, அவன் செய்ந்நன்றி மறவாத சான்றோன் என்பதை உணர்த்தும்.

3. கர்ணன், கிருஷ்ணனை மார்புறத் தழுவியபோது, அவனை மோட்சத்திற் சந்திப்பதாகக் கிருஷ்ணன் கூறினன். கர்ணனுக்கு வெளிப்பட்ட ஒரு தோற்றத்திலே, அவன், பாரதப் போரில் துரியோதனன் பக்கத்தில் அசுவத்தாமாவும், கிருதவர்மாவும், கிருபனுமே உயிர் பிழைக்க, மற்றையோர் யாவரும் மாண்டொழியக் கண்டான். இவற்ருல், அவனது ஆன்மீக வளர்ச்சியின் மேம்பாடு புலப்படும்.

4. கர்ணன், தன் பிறப்பைப்பற்றிப் பாண்டவர்க்கு வெளியிடாதிருக்கும்படி கிருஷ்ணனை வேண்டிக்கொண்டான். இது அவனது வீரத்தை எடுத்துக்காட்டும்.

## 2. விதுரன் மனையிலிருந்த கிருஷ்ணனிடம் இந்திரன் சென்றது முதல் பாண்டவர் சேனை குருக்ஷேத்திரத்தை அடைந்தது வரையிலான பகுதி:

1. இந்திரன் ஒரு கிழவேதியன் வடிவந் தாங்கித் தன்னிடம் வந்தபோது, அவனிடத்து விளங்கிய தவப் பொலிவைக்கண்டு வீழ்ந்து வணங்கி, அவனை ஆசனத்திருத்தி அருச்சித்தமை; அவன் தன்னிடம் வந்தது தான் செய்த மாதவம் என்று கருதியமை. இவை, கர்ணனது பெருந்தன்மையைப் புலப்படுத்தும்.

2. தான், வேதியன் விரும்பியதைக் கொடாவிட்டால், போர்முனையில் முதுகிட்டோடும் வேந்தர் போய்ச்சேரும் பதத்தை அடையவேண்டுமெனக் கூறியமை; தன்னிடமுள்ள பொருள்களையே வேதியன் கேட்டமை குறித்து மகிழ்ச்சி அடைந்தமை; கவசகுண்டலங்களைக் கொடுக்கவேண்டாமென அசரீரி கூறியும் அவற்றைக் கொடுத்தமை. இவை, கர்ணன் ஈவதைத் தனது முக்கிய கடமைகளுள் ஒன்றெனக் கருதி வாழ்ந்தவன் என்பதை எடுத்துக்காட்டும்.

3. கர்ணன், இந்திரன் தனது மெய்வடிவத்தைக் காட்டக்கூடிய நிலையிலிருந்தமை; இந்திரன் திவ்வியாஸ்திரமொன்றைக் கொடுத்தமை. இவை கர்ணனுக்கிருந்த பெருமதிப்பை விளக்கும்.

4. தான் யாரென்பதைக் குந்தி வாயிலாக அறிந்த பின்னர், பாண்டவர்களோடு உறவுகொண்டு வாழுமாறு அவளாற் கேட்கப்பட்டபோது, துரியோதனனை மறந்தால் தனக்கு உய்வில்லை என்று கூறி மறுத்தமை; அவன் செய்த பேருபகாரத்தை மறந்தால் இலக்குமி தன்னை விட்டு நீங்குவாள் என்றுங் கூறியமை. இவை, கர்ணன் செய்ந்நன்றி மறவாத உத்தமன் என்பதை விளக்கும்.

5. சர்ப்பக்கணையை அருச்சுனன்மீது ஒருமுறைக்குமேல் ஏவாதொழிதலும், மற்றைய பாண்டவர்களைக் கொல்லாதொழிலுமாகிய



இரு வரங்களைக் குந்திக்கு அளித்தமை, அவனுடைய தாயன்பையும் சகோதர பாசத்தையும் எடுத்துக்காட்டும்.

6. தான், ஒருகாற்றெடுத்த கணையை மறுகாற்றெடுப்பதில்லை என்று குந்திக்குக் கூறியமை, அவனது போர்க்கள வீரம், அறவாழ்க்கையில் அவன் கொண்டிருந்த நம்பிக்கை முதலியவற்றைப் புலப்படுத்தும்.

7. தான், அருச்சுனனல் இறக்குமிடத்து, அரசரெல்லாரும் அறியும்படி தன்னை மடியில் வைத்து அழுது, தான் யாரென்பதை உலகிற்கு அறியச் செய்யவேண்டுமென்ற வரத்தைத் தருமாறு குந்தியைக் கேட்டமை, தன் சுய கௌரவத்தைப் பாதுகாப்பதில் அவன் முன்னணியில் நின்றவன் என்பதைக் காட்டும்.

8. போர் முடியுங்காறும் தான் யாருடைய மைந்தன் என்பதைப் பாண்டவர்கள் அறியாவண்ணம் காத்தருளவேண்டும் என்ற வரத்தையும் தருமாறு குந்தியை வேண்டிக்கொண்டமை, அவன் ஒரு சுத்த வீரன் என்பதைப் புலப்படுத்தும்.

## 3. சிகண்டி போர் செய்யத் தொடங்கியது முதல் அருச்சுனன் நாகாஸ்திரத்தை இருகூறு செய்து யமபுரம் போக்கியமை வரையுள்ள பகுதி:

1. யுத்தகளத்தில், வீஷ்மர் யோக நித்திரை செய்தபோது கர்ணன் அங்கே சென்று அவரது பாதங்களில் வீழ்ந்து தொழுதமை; போர் செய்வதற்கு அனுமதி தருமாறு அவரை வேண்டிக்கொண்டமை; அறியாமை காரணமாகத் தான் செய்த பிழைகளைப் பொறுத்துக் கொள்ளுமாறு அவரை இரந்தமை. இவற்ருல் கர்ணனுடைய பெருந்தன்மை புலப்படும்.

2. தம்மைத் தொழுத கர்ணனை வீஷ்மர் கையாற் பற்றித் தழுவியமை; பெருந்தகை என்றும், சுத்தவீரன் என்றும், சிறந்த வள்ளல் என்றும், நன்றியுள்ளவன் என்றும் பாராட்டியமை. இவற்ருல் அவனுக்கிருந்த மதிப்பு விளங்கும்.

3. ஒருமுறை கர்ணன், துரோணரின் ஏவலால் அபிமன்னியுவுக்குப் பின்னே மறைந்து நின்று அவன் வில்லை அறுத்துப் பொடியாக்கியமை, நிர்ப்பந்தம் காரணமாக யுத்தமுறையை நோக்காதும் அவன் செயலாற்றியிருக்கிருன் என்பதைப் புலப்படுத்தும்.

4. தன்னுடன் போர் செய்த வீமன் தோல்வியடைந்தபோதும் நகுலனை நிராயுதனுக்கியபோதும் அன்னைக்குக் கொடுத்த வாக்கைக் காப்பாற்றுவதற்காக அவர்களைக் கொல்லாதுவிட்டமை; இரண்டாம்

முறை தன்னை ஏவும்படி நாகாஸ்திரம் இரந்தபோது அதற்கு மறுத்தமை. இவற்றால் அவனது நேர்மை புலப்படும்.

## 4. யுத்த களத்தில் கர்ணனது தேர்க்காலொன்று பூமியிற் புதைந்தது முதல் அவன் உயிர் பிரிந்ததைக் குந்தி அறிந்தது வரையுள்ள பகுதி:

1. தனது தேர்ச்சக்கரமொன்று பூமியிற் புதைந்து சிக்கியபோதும் கர்ணன் பாணந் தொடுப்பதில் தளராதிருந்தமை; அருச்சுனனின் அம்பு தைத்துத் தேரில் வீழ்ந்தபோதும் அவன் கைகள் கணைதொடுப்பதை விடாதிருந்தமை. இவற்றால் அவனது போர்க்கள வீரம் புலப்படும்.

2. யுத்தகளத்தில், அருச்சுனனை 'வில்லாண்மைக்கும் பெருந்தகைமைக்கும் உறைவிடமானவன்' என்று பாராட்டியமை, கர்ணனது பெருந்தன்மையை எடுத்துக்காட்டும்.

3. யுத்தகளத்திற் குற்றுயிராகக் கிடந்தவேளையிற்கூடத் தனது புண்ணியம் அனைத்தையும் ஈந்தமை; புண்ணியத்தைப் பெற்றுக்கொண்ட அருந்தவ முனிவரிடம் வேறு எந்த வரத்தையுங் கேளாது, தனக்குப் பிறப்புளதாயின் ஏழேழு பிறப்பிலும் இரப்பவர்க்கு இல்லையென்று உரையாத மனமும் வண்மையும் தந்தருளவேண்டுமென்ற வரத்தையே கேட்டமை. இவற்றால், கர்ணன் ஈவதையே தனது வாழ்க்கையின் அதி உயர்ந்த இலட்சியமாகக் கொண்டவன் என்பது புலப்படும்.

4. கர்ணன் அருந்தவ முனிவரைத் தரிசித்தது தனது தவப்பயன் என்று கருதியமை, அவனின் பற்றற்ற வாழ்க்கையை எடுத்துக்காட்டும்.

5. கிருஷ்ணன், அருந்தவ முனிவர் வடிவம் எடுத்து வந்தபோது, கர்ணனை மார்புறத் தழுவியமை, கர்ணனுக்கிருந்த மதிப்பை எடுத்துக்காட்டும்.

6. அருந்தவ முனிவர், அவனை ''முத்தியும் பெறுக'' என வாழ்த்தியமை; முனிவர், தமது பழைய வடிவத்தைக் காட்டக்கூடிய நிலையில் அவன் இருந்தமை; ''கர்ணன் உயிர்பிரிந்து சூரியனைக் கலந்தது'' என்று அசரீரி முழங்கியமை. இவற்றால் ஆன்மீகத்துறையில் அவன் அடைந்திருந்த அதி உயர்ந்த நிலை நன்கு புலப்படும்.

# 11. விகர்ணன்:

சூதாட்டத்தில் தருமன் தோல்வி அடைகின்றான். அப்போது துரியோதனன், ஏவலாளன் ஒருவனை நோக்கி, ''திரௌபதியும் அடிமையாயினள். அவளை இச்சபைக்குக் கொண்டு வருக'' எனப் பணிக்கிறான்.



ஏவலாளன், அவன் பணிப்பின்படி சென்று திரௌபதியை அழைக்கின்றான். அவள், ''எனது நாயகர் தம்மைத் தோற்றபின் என்னைத் தோற்றனரா? அன்றி என்னைத் தோற்றனரா? எனப் போயறிந்து வருதி'' என்று திருப்பிவிடுகிறாள். திரும்பிவந்தவன், திரௌபதி கூறியவற்றைத் துரியோதனனிடம் கூறுகிறான். அவன், திரௌபதியைப் பிடித்து வரும்படி தம்பி துச்சாதனனுக்குக் கட்டளையிடுகின்றான். அது கண்டும் சபையோர் யாதும் பேசாதிருக்கின்றனர். அப்போது விகர்ணனின் குரல் மேலோங்கி ஒலிப்பதைக் காண்கின்றோம். ''சபையோர்களே, நீங்கள் எதுவும் பேசாதிருப்பது என்னை? அரசன் கோபிப்பானென நினைந்தோ பேசாதிருக்கின்றீர்கள்? குலத்துப் பிறந்த பெரியோர், தாம் கண்ட முறைகேட்டைக் கண்டியாது இருக்கமாட்டாரன்றோ! தான் அடிமையானபின் தன் மனைவியை ஒட்டம் வைத்துத் தோற்பதற்கு உதிஷ்டிரனுக்கு உரிமையில்லை. எனவே, திரௌபதி வெல்லப்பட்டவளாகாள்'' என்று ஆணித்தரமாக எடுத்துரைக்கின்றான்.

கிருஷ்ணன் அஸ்தினாபுரத்துக்குத் தூதாக வந்த வேளையில், ''பாண்டவர்களுக்குச் சகாயம் உண்டாகாதிருத்தற் பொருட்டு, கிருஷ்ணனைப் பிடித்துச் சிறையில் இடுவதே சாலச் சிறந்தது'' என்று துரியோதனன் கூறினான். அப்போது துச்சாதனன், விதுரன் மனைக்குத் தீயிட்டு அவனையும் கிருஷ்ணனையும் கொன்று விடுவதாகக் கூறுகிறான். அவனை இடைமறித்து, ''நாளை உதயத்தில் பாணம் ஒன்றினால் கிருஷ்ணனைக் கொன்று மீளுவேன்'' என்றான் கர்ணன். இந்நிலையில், விகர்ணன் எழுகிறான். அவன் துரியோதனனை நோக்கி, ''பொறுத்தற்கரிய கொடும்பழி செய்த பகைவர்தாம் வரினும் உண்மை வீரரானவர்கள் தமது நாட்டில் அவரைக் கொல்ல மனம் பொருந்தார்கள்; அங்ஙனங் கொல்லுதல் ஆண்மையும் அன்று'' என மொழிகின்றான்.

இவற்றை நோக்கும்போது, பெரியோராயினார் எவரும், தவறுகளைக் கண்டபோது திருத்த முன்வரவேண்டுமென்ற பெருங்கோட்பாடும், நிகழ்ச்சிகளெவற்றையும் காரண காரிய முறையில் நோக்கும் திறமையும், நீதிக்காக அச்சமின்றி வாதாடும் நேர்மையும், ஏழைகள் பெண்டிர் என்றின்னோர் நலனைப் பேணுவதிற் கொண்ட பற்றும், அதிகாரம் உறவு என்பவற்றைத் துச்சமாக வெறுக்கும் துணிவும், மற்றும் நீதி சாத்திரங்களைத் துறைபோகக் கற்ற நிறைவும் விகர்ணனிடம் மிக்கிருத்தலை அறியலாம்.

# 12. துரோணர்:

இவர், பரத்துவாச முனிவரின் மைந்தர்; பரசுராமனிடத்தே வில்வித்தை பயின்றவர்; அவ்வித்தையில் தமக்கு ஒப்பாரும் மிக்காரும்

இன்றி விளங்கியவர்; கௌரவருக்கும் பாண்டவருக்கும் வில்லாசிரியராக விளங்கியவர்; குருபக்தி விவேகம் முதலியன உள்ளவர்களிடம் பேரன்பு காட்டுபவர்; பாரம்பரியக் கோட்பாடுகளை, பழக்கவழக்கங்களை மீறுது பேணிக் காப்பவர்; பழைமையை மறந்து புதிதாய்க் கிடைத்த செல்வம், பதவி, அந்தஸ்து முதலியன காரணமாகச் செருக்குற்று நடப்பவர்களுக்குத் தக்கபாடம் கற்பிப்பதில் பின்னிற்காதவர். அருச்சுனனைக் கொண்டு பாஞ்சாலனைச் சிறைப்பிடித்த செய்தி இதற்குத் தக்க எடுத்துக்காட்டாகும். இவர் நன்றி மறவாமை, செருக்கின்மை முதலிய நற்பண்புகளைப் போற்றுபவர்; ஆசைகளுக்கு அடிமைப்படாதவர். புத்திரபாசம் மிக்க இவர், ''அசுவத்தாமா என்னும் மதயானையும் இறந்து விட்டது'' என்று வீமன் கூறக் கேட்டதும் தம் மகன் இறந்து விட்டதாக எண்ணியவர்; அதனால் செயலற்றும் நின்றவர்.

## 13. சகுனி:

ஆசிரியர், சகுனியைக் காந்தாரநாட்டு மன்னன் சுபலனின் மகனாகவும் மாமன்னர் திருதராஷ்டிரனின் பட்டத்தரசி காந்தாரியின் சகோதரனாகவும், துரியோதனனாதியர்க்கு அருமை மாமனாகவும் எம்முன் நிறுத்துகின்றார். பின்னர், இவன் இயல்பிலேயே பொறாமை, வஞ்சகம் முதலிய தீய குணங்களுக்கு இருப்பிடமானவன் என்பதைக் காட்டுகின்றார்; துரியோதனன் பாண்டவர்களுக்குச் செய்த கொடுஞ் செயல்களுக்கெல்லாம், இவன் உடந்தையாக இருந்தமையை உணரவைக்கின்றார்; வஞ்சனை மூலமே எதையும் சாதித்தல் சுலபம் என்ற கோட்பாடு இவன் உள்ளத்தே படிந்திருத்தலைக் காட்டுகின்றார்; எடுத்த கருமத்தை ஏதுவோடு விளக்கும் இவனது திறமையையும், வாக்குவல்லபத்தையும் பல்வேறு கோணங்களில் விளக்கிக் காட்டுகின்றார். பழிபாவங்களுக்கு அஞ்சாத இவனது இயல்பு பல சம்பவங்களின் மூலம் தெரியவருகின்றது. கண்ணபிரான் தூதாக வந்தகாலை அவரைக் கொல்லுதல் தகாதென்று கூறி அடிமை கொள்ளுவதற்காகப் படுகுழி தோண்டுவித்து அதில் வீழ்த்தி, விலங்கிடச் சூழ்ச்சி செய்தமை கொண்டு இவனுடைய பழிவாங்கும் சுபாவத்தை அறியலாம். இவனது சூதாட்டத் திறமையே கௌரவரை நிர்மூலஞ் செய்தது.

சகுனி மூலம் ஆசிரியர், அறத்திற்கும் மறத்திற்கும், நன்மைக்கும் தீமைக்கும் உலகிலே சதா நிகழ்ந்து கொண்டிருக்கும் போராட்டத்தை உணர்த்தித் தருமமே வெல்லும் என்ற நம்பிக்கையை எமது நெஞ்சத்தே நிலைக்கவைக்கின்றார்.

## 14. அபிமன்னியு

அபிமன்னியு, கிருஷ்ணன் சகோதரி சுபத்திரை வயிற்றில் அருச்சுனனுக்கு மைந்தனாகப் பிறந்தவன்; வேதசாஸ்திரங்களைக் கற்றுத்



தேறியவன்; படைக்கலப் பயிற்சியில் வல்லவன்; அருச்சுனனிலும் மிக்க போர்வலி படைத்தவன்; இளைஞர்களுக்கு முன்னோடியாகத் திகழ்ந்தவன்.

பழிபடும் செயல் எதனையும் விரும்பாத பண்பாளன் அபிமன்னியு. இவன் சசிரேகையைக் காதலித்து வாழ்ந்த காலத்தில், துரியோதனன் மகனுக்கு அவளைக் கொடுக்கத் தந்தை பலராமன் விரும்பினான். இதனை அறிந்த காதலர் இருவரும் ஒருநாட் சந்தித்து உரையாடிய பின்னர், சசிரேகை அபிமன்னியுடன் செல்லத் துணிந்து சிறிது தூரம் நடந்தாள். பின்னர், அவள். இரவில் உடன்போக்கில் ஈடுபடுவது இருவருக்கும் இழிவு என்றுகூற அதன்படி நெஞ்சத்து ஆசையைக் கட்டுப்படுத்தி நின்றவன் அபிமன்னியு. அவன் பெரியோரின் நம்பிக்கைக்கும் அன்புக்கும் உரிமைபூண்டு ஒழுகியவன்; ஆண்டில் இளைஞனேனும் வீரர்கள் பெரியோர் முதலானவர்கள், விஷயங்களை அலசி ஆராயும் அவைகளில் அங்கம் வகித்தவன்.

துணிவு, வீரம், அச்சமின்மை முதலிய அருங்குணங்கள் படைத்த அபிமன்னியு, பாரத யுத்தத்தில் ஆற்றல் அனுபவம் சூழ்ச்சிவலி மிக்க மாரதர்களோடு சளைக்காமல் நின்று அமர் புரிந்தான். இவன் கிருபர், அசுவத்தாமன், கர்ணன் முதலிய மாபெரும் வீரர்களை யுத்தகளத்தில் புறங்கொடுத்தோடச் செய்தவன். தேவர்களும் பாராட்டும் வெற்றி மேம்பாடுடைய அபிமன்னியு, வியூகங்களை உடைப்பதில் பேராற்றல் பெற்றவனாகத் திகழ்ந்தான். நிராயுதபாணி ஆக்கப்பட்ட வேளையில், தேர்ச்சில்லை ஆயுதமாகக்கொண்டு போர்புரிந்த சாமர்த்தியசாலி அபிமன்னியு.

## 15. கிருஷ்ணன் பாண்டவர் சகாயன்:

திருமாலின் அவதாரம் என்று போற்றப்படும் கிருஷ்ணன், பாண்டவர்களின் அன்னையாகிய குந்திதேவிக்கு மருகனானவன். துஷ்ட நிக்கிரக சிஷ்ட பரிபாலனஞ் செய்தலையே தலையாய நோக்கமாகக் கொண்ட இவன், பாரத யுத்ததில் பாண்டவர்கள் வெற்றி பெறுவதற்கு மூலகாரணனாய் இருந்தான்.

பாண்டவர், பார்ப்பன வடிவிற் சென்று இலக்கு வீழ்த்தித் திரௌபதியைத் தமக்குரிமையாக்கிக் கொண்ட சமயத்தில், துருபதனுடன் அரசகுமாரர்கள் சண்டைக் கெழுந்தபோது அவர்களை அருச்சுனன் புறங்காணச் செய்கின்றான். அவ்வேளையில் கிருஷ்ணன் நடுவனாகத் தோன்றி, தொல்லை நெடும்பிறவி தோறும் தொடர்ந்துவந்த பழங் கேண்மையைக் காட்டிக்கொள்ளுகின்றான்.

இந்திரப்பிரஸ்த நகரத்தைத் தேவகம்மியனைக் கொண்டு ஆக்குவித்ததோடமையாது ஆங்கு எழில்மிகு மாளிகையொன்றையும் அமைப்பித்துதவுகின்றான்.

அருச்சுனன் சுபத்திரையை மணமுடிப்பதற்கு உறுதுணையாக அமைகின்றான். கொடியனாகிய துரியோதனன் திரௌபதியை அரசவையில் வைத்துத் துகிலுரிவித்தபோது அவள் மானத்தைக் காப்பற்றுவதற்குத் தன் தெய்வீக சக்தியால் அவள் அணிந்திருந்த ஆடையை வரளச் செய்கின்றான்.

பாண்டவர், வனவாசம் அஞ்ஞாதவாசம் என்பவற்றை முடித்து மீண்டபின், இவனுடைய உதவி மேலும் உயர்கின்றது. விராடன் அரசவையிலே நடைபெற்ற ஆலோசனைக் கூட்டத்தில், துரியோதனனிடம் தூதுபோக வேண்டுமென முன்மொழிகின்றான். தானே தூதும் செல்கின்றான்.

அஸ்தினாபுரம் புகுந்து விதுரன் அரண்மனையிலே தங்கி, அவன் பாரதயுத்தத்திற் பங்குகொள்ளாது வில்லை ஒடித்து யாத்திரை போக வைக்கின்றான். குந்திதேவியைக் கர்ணனிடம் அனுப்பி, நாகக்கணையை ஒருமுறைக்குமேல் விடாதிருக்கும்படி அவனிடம் வரம்பெற்று வரவும் செய்கின்றான். அல்லாமலும், இந்திரனை அழைத்துக் கவசகுண்டலம் இருக்கும்வரை கர்ணனை வெல்லமுடியாதென்று கூறி, அவற்றை விரகினால் கவர்விக்கின்றான். துரியோதனன் பக்கத்தில், படைத் தலைவனாகாதிருக்கும்படி அசுவத்தாமனை வேண்டிக் கொள்கின்றான்.

துரியோதனன் படைத்துணை கேடடு முதலிற் சென்று தலைமாட்டுப் புறத்தே இருப்பவும் துயில்வான் போல் நடித்து கால்மாட்டுப் புறத்தே இருந்த அருச்சுனனுக்குத் தரிசனந் தந்து, வந்த காரியம் வினவித் துரியோதனனோடு பேசினான். துரியோதனனுக்குப் படைத் துணை உதவி, அருச்சுனனுக்குப் படைக்கலம் எடாதிருந்து உதவுவேன் என்று உறுதி அளிக்கின்றான்.

போர்த்தொடக்கத்தில், உற்றார் உறவினரையெல்லாம் கொன்று தொலைக்கப் போகிறேனே என்று அருச்சுனன் பீதியுற்றுத் தளர்ந்தபோது, கீதோபதேசஞ் செய்து அவனுக்குப் போரிலே ஊக்கத்தை உண்டுபண்ணுகின்றான். ''பொழுதுபடுமுன் ஜயத்திரதனைக் கொல்லாதொழியின் இறந்துபடுவேன்'' என்று சபதஞ் செய்த அருச்சுனன் பொருட்டுச் சக்கரப்படை கொண்டு சூரியனை மறைத்து, இரவாயிற்று என்று எதிரிகளை எண்ணவைத்து ஜயத்திரதனைக் கொல்ல அருச்சுனனுக்கு உதவுகிறான்,

கர்ணன் நாகக்கணையைத் தொடுத்தபோது இரதத்தை நிலத்துள் தாழச்செய்து, கணையின் இலக்கு, தலையைக் கொண்டு போகாது தலைப்பாகையைக் கொண்டு போக வைக்கின்றான்; அருச்சுனன் உயிரைக் காக்கின்றான்.

பதினேழாம் நாள் யுத்தத்திலே தருமதேவதை, கர்ணனைக் காத்துநிற்க, அந்தணன் வடிவுகொண்டு சென்று தருமத்தைத் தாரை வார்ப்பித்து வாங்கிக்கொள்ளுகின்றான். இவ்வாறாகப் பல்வே நிலைகளில் கிருஷ்ணன் பாண்டவர் சகாயனாக இருந்து உதவினான்.

# தமிழ் வளர்ச்சிக் கழகம், காரைநகர்.

க. பொ. த. ப. (சா / த) வகுப்பு மாணவர்களுக்கென
விசேடமாகத் தயாரிக்கப்பட்ட

## புத்தம்புதிய நூல்கள்

| | | ரூ. | ச. |
|---|---|---|---|
| 1. | தமிழ் இலக்கிய வினாவிடை (''அ'' பாடத்திட்டம்) | 6 | 00 |
| 2. | தமிழ் இலக்கிய வினாவிடை (''ஆ'' பாடத்திட்டம்) (ஆக்கம்: ஜனப் அ. ஸ. அப்துஸ்ஸமது பீ. ஏ.) | 6 | 00 |
| 3. | தொடர்மொழிப் பொருளுக்கு ஒரு சொல் | 6 | 00 |
| 4. | பாரத இதிகாசத்தில் வரும் பாத்திரங்களின் குணவியல்பு | 7 | 50 |
| 5. | மதிப்பீட்டுப் பயிற்சிக் கோவை (தமிழ்மொழி - பகுதி I) | 6 | 00 |
| 6. | Simple English With Grammar | 5 | 00 |

### ★ நூற்பிரதிகள் கிடைக்குமிடங்கள் ★

1. ஸ்ரீ சண்முகநாத அச்சகம், யாழ்ப்பாணம்.
2. ஓம் முருகா ரெக்ஸ்ரைல்ஸ், வலந்தலை, காரைநகர்.
3. தனலக்குமி புத்தகசாலை, சுன்னுகம்.
4. சிவம் மெடிக்கல் ஸ்ரோர்ஸ் & புத்தகசாலை, சாவகச்சேரி.
5. இலங்கை மத்திய புத்தகசாலை, கொழும்பு வீதி, கண்டி.
6. சொய்ஸ் பலெஸ், கல்முனை.

அச்சுப்பதிப்பு:-
பாலா அச்சகம், காரைநகர்.  24